

ஸ்ரீ அன்னமய்யா திருவுருவம் பதிக்கப்பட்ட செப்புச் சிலையினைத் திருப்பதி முக்கிய வீதிகளில் திருவீதிவுலா எடுத்துச் செல்லப்பட்டபோது.



ஸ்ரீ அன்னமய்யா திருவுருவச்சிலையும், ஸ்ரீ நிவாசமங்க ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில் உற்சவமூர்த்திகளும்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா அன்னமாச்சார்யா இசை விழா

புகழ்பெற்ற சமய இசைக் கவிஞர்களின் வண்ணத் திருவுருவச் சித்திரங்கள் இவ்வூர்வலத்தின்போது எடுத்துச்செல்லப்பட்டபோது.



ஸ்ரீ அன்னமய்யாவின் திருவுருவச் சிலையினைத் திறந்து வைத்த ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. என். எதிராஜ ராவ் அவர்கள் சடாரி ஏற்கின்றார்.

திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சா கலா மந்திரத்தில் இசை விழா துவக்க நாள் பூஜையின்போது.





வ்யாஸம் வசிஷ்ட - நப்தாரம்
சக்தே: பௌத்ரமகல்மஷம்
பராசராத்மஜம் வந்தே
சுகதாதம் தபோநிதிம்
வ்யாஸாய விஷ்ணு ரூபாய
வியாஸ ரூபாய விஷ்ணவே.

(வசிஷ்டருடைய கொள்ளுப் பேரரும், சக்தியின் பேரரும், பராசருடைய புத்திரரும், சுகருடைய தகப்பனரும், மாசற்ற தபோதனருமாகிய விஷ்ணு ரூபமான வியாசரை வணங்குகிறேன்)

—ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாம ஸ்தோத்திரம்

ஜுலை, 1985

# ஸப்தகிரி

இதழ் 2 மலர் 16

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : ஓவியர் திரு. பாப்பு கைவண்ணத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர்

2-வது : ஸ்ரீ அன்னமாச்சார்யா திருவுருவ திருவீதிவுலா நிகழ்ச்சிகள்

3-வது : ஸ்ரீ அன்னமாச்சார்யா பிரிவு வாழ்த்துரை விழா நிகழ்ச்சிகள்

பின்னட்டையில் : இசை விழாவிற்கு வருகை புரிந்த மக்கள் கூட்டத்தின் ஒரு பகுதி

*சிறப்பாசிரியர் :*
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

சிந்திக்கத் தெரிந்தவன் மனிதன். அச்சிந்தனையின் விளைவால் பல எண்ணங்கள் மனதில் எழுகின்றன. அவ் எண்ணங்களின் தூண்டுதலினால் ஏற்படும் உணர்ச்சிகளை தன் முகத்தில் காட்டுகின்றான் அம்மனிதன். அதுபோது ஏற்படும் முகமாற்றங்களைக் கொண்டு அடுத்தவன் அவனுடைய உணர்வுகளை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். இந்நிலை மனித இனம் தோன்றிய ஆரம்பக்கட்டமாக இருந்தது. பின் தன் உணர்வுகளைத் தூரத்திலிருக்கும் ஒருவனுக்கு அறிவிக்கும் வகையில் அவன் தன் எண்ண உணர்வுகளுக்கு ஏற்ப சில சைகைகளைக் காட்டத் தலைப்பட்டான். இன்னும் வெகுதூரத்திலிருக்கும் ஒருவனுக்குத் தன் உணர்வுகளைக் காட்டுவதற்கு அவன் சில ஒலிகளை எழுப்பினான் அந்த ஒலிகளைக் கொண்டே அவனது அச்சத்தினையும், மகிழ்ச்சியினையும், துன்பத்தினையும் மற்றவன் அறிந்து கொண்டான். இது கற்கால மனிதனின் கடந்தகால நிலை. தலைமுறைகள் பல கடந்த பின் சிந்தனையின் வளர்ச்சியினால்—முதிர்ச்சியினால் அவ் ஒலிகளுக்கு வடிவம் கொடுக்கத் தலைப்பட்டான். அதுவே மொழி ஒன்று தோன்ற வழி கோலியது. வடிவங்கள் இடத்திற்கு இடம் மாறுபட்டன. அதனால் மொழிகள் பல பிறந்தன. இம்மொழிகள் வடிவத்தாலும், ஒலியாலும், பொருளாலும் மாறுபட்டாலும், அம்மொழி எழுத்துக்களைச் சற்றேஇழுத்து அதாவது இசையுடன் ஒருவன் ஒலித்திட்ட போது, அடுத்தவன் அவனைப் பார்க்க ஆரம்பித்தான். பின் அவன் இசையை கேட்க ஈடுபட்டான். உணர்ச்சியுடன் அவ்எழுத்துக்களைப் பாடிடும் போது பொருள் தெரியாத அம்மொழி அறியாத மற்றொரு மொழிக்காரன் அவ்வுணர்ச்சிகளை உணர முற்பட்டான்; பின் உணர்ந்து ஆனந்திக்க ஆரமபித்தான். ஆம் குலம், குணம், இனம், நிறம், மொழி, இடம் ஆகியவை மறந்து மனிதனை மனிதனாக விளங்கச்செய்த பெருமை அந்த இசைக்கே இருந்தது.

இசையின் முன் மனித இனம் மட்டுமல்ல எந்த இனமும் தங்களை மறந்து விடுகின்றன என்பதற்குப் புராணக் காலத்திலிருந்து இந்த அணுகுண்டு யுகம் வரை நிகழ்ந்த — மற்றும் நிகழ்ந்து கொண்டிருக்கும பல நிகழ்ச்சிகளே சாட்சிகளாம். கண்ணனின் குழலோசையின் பின் ஆநிரைகள் சென்றதும், வீணை இசைத்து இராவணன் சிவனருள் கண்டதும், சொல்லிசைத்து தான்சேன் விளக்கெரித்ததும் அன்றைய காட்சிகள் என்றால், மகுடியின் முன் நாதம் நின்றாடுவதும், தாலாட்டு இசையில் அழும் குழவி அடங்குவதும், இனிய இசையில் மயங்கி பசுக்கள் பாலை அதிகம் சொரிவதும், வாடிய பயிர்கள் வளர்வதும் இன்றைய சாட்சிகளாகும்.

இவ் இசையின் பெருமையை மனதிற் கொண்டே அன்றே தமிழ் இலக்கியங்களான சிலம்பு, பரிபாடல், ஆற்றுப்படை நூல்கள் போன்றன பல பண் வகைகளை விளக்கிக் கூறியுள்ளன. மேலும் நிலங்களின் வகைகளையும் அதற்கான பண் வகைகளையும், இசைக் கருவிகளையும்கூட வகைப்படுத்தியுள்ளன. இவ் இசையே மனிதன் தன்னை அறிந்து கொள்ளவும், தன்னைப் படைத்த இறைவனைக் கண்டு கொள்ளவும் வழிவகுக்கும் பெரிய பாதையாக அமைந்தது. 'பண்ணின் இசையாக நின்றாய்', 'வாயாரத் தன் அடியே பாடுந்தொண்டர் இனத்தகத்தான', 'கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப் பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி' என்ற அடிகளும், 'விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்' எனத் திருமலையானைப் பத்துப் பண்களைக் கொண்டு பதிந்தேத்திய அடியார் செயலும் இறைவனுக்கும் இசைக்கும் உள்ள பிணைப்பின் பெருமையினை நன்கு தெரிவிக்கின்றன. நம் மெய் வருந்தாது நம்மைக் கடும் வழிமுறைகளைப் பின்பற்றச் செய்யாது எளிய முறையில் இருத்தி, மாதவனையே மானிடனை நாடிடும் வகையில் பக்தி முறையினைப் பரப்பியவர்கள் ஆழ்வார்களும், நாயன்மார்களும்.

அவர்களுக்குப்பின் பக்தி மார்க்கத்தினை மிகவும எளிமைப்படுத்திப் பெருமைப்படுத்தினர் கபீர்தாஸ், சூர்தாஸ், மீராபாய், துளஸிதாஸர், சைதன்யர், ராமதாஸர், தியாகராஜர், சியாமா சாஸ்திரி, முத்துசாமி தீட்சதர், அன்னமாச்சார்யர் போன்றோர். பக்தியின் முன் எந்தவித வேறுபாட்டிற்கும் இடம் இல்லை என்பதை நிரூபித்தவர்கள் அவர்கள். அதற்கு அவர்களுக்கு உறுதுணையாக அமைந்தது இசை இசையினால் அவர்களின் பெருமையும், அவர்களினால் இசையும் சிறப்பும் பேசப்பெற்றன. இவர்களின் இணைப்பாலேயே தேசிய ஒருமைப்பாட்டிற்கு வழி ஒன்று ஏற்பட்டது. ஏன் அனைத்து நாட்டு அளவிலும் இசை தனக்கென ஓர் இடத்தையும் பிடித்துக்கொண்டது. இதற்கு அத்தாட்சியாக மேலை நாட்டார் பலர் இந்திய கர்நாடக இசையிலும், இசைக்கருவிகளிலும் காட்டிய ஆர்வமும் பயிற்சியும், புலமையும், ஆராய்ச்சிகள் மேற்கொண்ட செய்திகளும் விளங்குகின்றன.

இவ்வுண்மையை மனதிற்கொண்டுதான், இன்றைய பாரதத்தில் நடந்து கொண்டிருக்கும் இன, இட, ஜாதி, மொழிக் கலவரங்களுக்கும், வன்முறைகளுக்கும் இசை மட்டுமே ஒரு தீர்வாக இருக்கும் என்ற நம்பிக்கையில் தனது முயற்சியின் முதல்படியாக, தெலுங்கு பக்தி இசைக் கவிஞரான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 577-வது பிறந்தநாள் விழாவை தேசிய அளவில், நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சார்ந்த — மொழிகளைச் சார்ந்த சில இசைக்கலைஞர்கள் பங்கேற்கும் வகையில் ஒரு மாபெரும் இசைவிழா நிகழ்ச்சியினை அண்மையில் திருப்பதியில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் ஏற்பாடு செய்து, அதனை வெற்றிகரமாகவும் நடத்திக் காட்டியது. இவ்வெற்றி, எதிர்வரும் ஆண்டுகளில் நடக்க இருக்கும் இதுபோன்ற விழாக்களின் மூலம் பாரதத்தின் தனித்தன்மை மேலும் ஒளிர்ந்தோங்கிடும் என்னும் நம்பிக்கைக்கு, ஒரு தூண்டுகோலாக அமையும் என்றே நம்புவோம்.

# செய்திச் சுருக்கம்



## இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா:

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் வட ஆற்காடு மாவட்ட கிளை அண்மையில் வேலூரில் உள்ள திருவேங்கடவன் மேல் நிலைப்பள்ளி அரங்கில் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளால் திறந்து வைக்கப்பட்டது. அதுபோது சுவாமிகள், இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் நடைபெற்று வரும் இலவச வடமொழி வகுப்புகள், ஹரிகதை மற்றும் சமயச் சொற்பொழிவுகள் போன்றவற்றைப் புகழ்ந்து பேசினார். இத்திறப்பு விழா நிகழ்ச்சியில், தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. டி. சுப்பராயலு மற்றும் திருப்பதி இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா செயலர் திரு. எஸ். லக்ஷ்மணய்ய நாயுடு ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். இவ்விழாவிற்கு வருகை புரிந்தோரை வட ஆற்காடு படிவிழா அமைப்பாளர் மின்னல் ஆ. செ. நரசிம்மன் அவர்கள் வரவேற்றுப் பின்னர் இறுதியில் நன்றியும் நவின்றார்.

## கோடைப்பள்ளி:

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் வருடாந்திர சமயக்கோடைப் பள்ளி ஒன்று இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் திருப்பதி எஸ். வி. பால மந்திரத்தில் 6-5-85 முதல் 5-6-85 வரை நடைபெற்றது. இதுபோது, ஆந்திர மாநிலத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ள இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா அமைப்பாளர்கள் உள்ளிட்ட 100 பிரமுகர்களுக்குச் சமயப் பயிற்சி அளிக்கப்பட்டது. இக்கோடைப்பள்ளியினை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயண அவர்கள் துவக்கி வைத்தார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட துவக்க விழாவில் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள் திரு. பி. வெங்கடேஸ்வரலு, திரு. எல். நரசிங் நாயக் மற்று திருப்பதி இந்து தர்ம ரக்ஷ சமஸ்தா செயலர் திரு. எஸ். லக்ஷ் ணய்ய நாயுடு ஆகியோர் பங்கேற் உரையாற்றினர். பயிற்சியாள களுக்கு யோகத்திலும், சமய சொ பொழிவு துறையிலும் பயிற்சி அளி கப்பட்டது. மேலும் பயிற்சியாளர் களும் பங்கேற்கும் வகையில், ஹரி கதை நிகழ்ச்சிகளும் நடத்தப்பட் டன. இப்பயிற்சி நாட்களின்போது, அவர்களுக்கு இலவச உணவும், தங்கு வசதியும் ஏற்பாடு செய்யப்பட்டன.

## சில செய்திகள்:

ரூ. 54 இலட்சம் செலவில், திருமலை அடிவாரப் பகுதியில் உள்ள காலி கோபுரத்திலிருந்து திருமலையில் உள்ள ஸ்ரீ நரசிம்ம சுவாமி கோயில் வரை யாத்திரிகர்களின் நலனுக்காக கற் படிக்கட்டுகள் கட்டப்படும்.

தற்போது திருமலைக்கு வரும் யாத்திரிகர்கள் கூட்டம் இந்தக் கோடைக் காலத்தில் நாளுக்கு நாள் பெருகி வருவதால், திருமலையில் தற்போது இலவசமாக உணவு பெறும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை 2500 லிருந்து 5000 வரை உயர்த்தப்பட்டுள்ளது.

தற்போது திருப்பதியில் உள்ள தி. தி. தே. ஸ்ரீ வேங்கடேஸ்வரா சிற்பக்கலை பயிற்சி நிலையத்தினை மகாபலிபுரத்திலுள்ள அரசு சிற்பக்கலைக் கல்லூரியினைப் போன்று செயற்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது. மேலும் வரும் கல்வி ஆண்டிலிருந்து இந்நிலையத்தில் கோவில் சிற்பக்கலையில் ஐந்தாண்டு சான்றிதழ் படிப்பு ஒன்றும் ஆரம்பிக்கப்பட உள்ளது.

மேற்கு கோதாவரி மாவட்டம் கன்னவரத்திலுள்ள சாரிபல்லி கிராமத்தில் உள்ள ஸ்ரீ சிதாராம சுவாமி கோயிலின் நிர்வாகப் பொறுப்பினை தி. தி. தே. அண்மையில் ஏற்றுக் கொண்டுள்ளது. தற்போது அங்கு தி. தி. தே. திருமண மண்டபம் ஒன்றினை விரைவாகக் கட்டி வருகின்றது.



# சுந்தரர் பாடிய குடப்பாச்சில்

'சிற்பங்களில் படி முடிச்சு' என்னும் எனது கட்டுரைக்கான செய்திகளைத் திரட்டப் பாச்சல் என்னும் ஊருக்குச் சென்றபோது அங்கிருக்கும் கல் குதிரையைப் பார்வையிடும் வாய்ப்புக் கிடைத்தது.

அவ்வூர் செல்லாண்டியம்மன் கோயிலுக்கு முன்புள்ள கல் குதிரை, அவ்வூர், அங்குக் காணப்படும் கல்வெட்டுகள் இவற்றிற்குப் பின்னணியில் அவ்வூருக்கென்று ஒரு வரலாறே இருப்பது தெரிய வந்தது.

ஒரு காலத்தில் வரலாற்றுச் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்த பாச்சல் இன்று சிற்றூராக, கைத்தறி நெசவுக்குப் புகழ் பெற்று விளங்குகின்றது.

சேலம் பேருந்து நிலையத்தில் 52 ஆம் எண்ணுள்ள பேருந்தில் ஏறிப் பயணம் செய்து இராசிபுரத்தில் இறங்குகிறோம். அங்கிருந்து 5 ஆம் எண்ணுள்ள பேருந்தில் பயணம் செய்து பாச்சலை அடையலாம். ஆனால் இவ்வூரின் பழஞ்சிறப்பைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும் 'மூனு சாவடி' என்னும் இடத்தைப் பார்வையிடுவதற்காகப் பாச்சலுக்கு முன்பே மூனுசாவடி ஸ்டாப்பில் இறங்கிக் கொள்கிறோம்.

மூனுசாவடி பயணியர் விடுதியின் எதிரில் 5 அடி உயரமுள்ள சிவலிங்கம் ஒன்று காணப்படுகின்றது. அதன் எதிரில் சிறிய நந்தி உள்ளது. சேலம்-திருச்சி நெடுஞ்சாலையின் வழியாகப் பயணம் செய்யும் டிரைவர்கள், கண்டக்டர்கள் இங்கு இறங்கிக் கற்பூரம் கொளுத்தி வழிபாடு செய்துவிட்டுச் செல்லுகின்றனர்.

நெடுஞ்சாலையின் மேற்கில் பாழடைந்த நிலையில் உள்ள இரண்டு கற்கோயில்கள் நமது கண்களில் படுகின்றன. இரு கோயில்களிலும் மூலவர் படிமங்கள் இல்லை. ஒன்றுக்கு மட்டும் சிதைந்த நிலையில் கோபுரம் உள்ளது. இரு கோயில்களும் கிழக்கு முகமாக அமைந்துள்ளன.

'மூனு சாவடி' என்னும் பெயர்ப் பலகைக்கு நேரில் கிழக்கு நோக்கி ஒரு பர்லாங் தொலைவில் மூனுசாவடி என்னும் சிற்றூர் உள்ளது. இங்குள்ள அம்மன் கோயில் சுற்றுச் சுவரில் காணப்படும் பலகைக் கற்களில் உள்ள கல்வெட்டுகள் இரண்டும் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தைச் சேர்ந்தவை. வேறிடத்தில் இடம் பெற வேண்டிய இக்கற்கள் இடம்மாறி இங்கு வந்து சேர்ந்துள்ளன.

முதலாம் இராசேந்திர சோழனின் மெய்க்கீர்த்தியாகிய 'கெங்கையும் கிடாரமும் பூர்வ தேசமும் கொண்ட கோப்பரகேசரி பன்மராகிய ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்' எனத் தொடங்குகின்றது. ஒரு கல்வெட்டு இராஜேந்திர சோழனின் 13ஆம் ஆட்சியாண்டையும் (கி. பி. 1025), மற்றொன்று 22ஆம் ஆட்சியாண்டையும் (கி. பி. 1034) சேர்ந்தது.

இக்கல்வெட்டுகளில் காணப்படும் செய்தியாவது 'உலகளந்தான் சதுர்வேதி மங்கலத்து திருவாச்ராமமுடைய பரமேச்வரர்க்குத் திருநந்தவனத்துக்காக இரு கழஞ்சு பொன் கொண்டு நிலம் பெற்று, ஊர்ச் சபையாரிடம் அளித்த செய்தியும், அதே கோயிலுக்குப் புதுக்குப் புறமாக (திருப்பணிமுதலியவைகளுக்கு) நிலம் பெற மூன்று கழஞ்சு பொன் ஊர்ச் சபையாரிடம் கொடுத்த செய்தியும் ஆகும்.

ஏற்கெனவே குறிப்பிடப்பட்ட சிவலிங்கம், பாழடைந்த நிலையில் இன்று இருக்கும் கோயில்களில் ஒன்றில் வைக்கப்பட்டிருக்க வேண்டுமா? அல்லது இரண்டிற்கும் தொடர்பில்லையா என்பது தெரியவில்லை.

பாழடைந்த கோயிலில் இருந்த சிவலிங்கம் அங்கிருந்து எடுத்துச் செல்லப்பட்டு பாச்சலில் இருக்கும் கோயிலில் வைக்கப்பட்டது என்றும் சில பெரியவர்கள் கூறுகின்றார்கள்.

முதலாம் இராஜேந்திரனின் கல்வெட்டுப்படி பாழடைந்த மூனு சாவடிக் கோயில்களில் அக்காலத்தில் இருந்த இறைவருக்கு 'செயங்கொண்ட நாதர்' என்றும், 'உலகளந்தான் சதுர்வேதி மங்கலத்து திருவாச்ராமமுடைய பரமேச்வரர்' என்றும் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

திரு. பா. அன்பரசு, எம்.ஏ.,
சேலம்.

அக்காலத்தில் (கி.பி. 1012-1044) இவ்வூர் 'உலகளந்தான் சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் கொடுக்கப்பட்டு, பிரம்மதேயம் ஆக்கப்பட்டது. பிரம்மதேயம் என்பது வரிஇல்லாமல பிராம்மணர்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட இடத்தைக் குறிக்கும்.

'உலகளந்தான்', 'இராஜச்ரயன்', 'சிங்களாந்தகன்' என்பன முதலாம் இராஜராஜ சோழனுக்கு உரிய பட்டப் பெயர்களுள் சில. இவனுடைய பெயரைப் பறை சாற்றும் வண்ணம் 'சிங்களாந்தபுரம்' என்னும் சிற்றூர் இராசிபுரம்-சேந்தமங்கலம் பாதையில் உள்ளது.



பாச்சல் செல்லாண்டி அம்மன் கோயில் முன்பு உள்ள நுணுக்கமான வேலைப்பாடு கொண்ட குதிரைச் சிற்பம்

இந்நாளில் பாச்சல் என்று குறிப்பிடப்படும் சிற்றூர் முதலாம் இராஜேந்திரன் காலத்தில் (கி. பி. 1012-1044) இன்றிருக்கும் மூனுசாவடி வரைக்கும் பரவி இருந்திருக்க வேண்டும். இங்கிருந்த பிராம்மணர் அல்லாத பிற சாதியார் இங்கிருந்து கிழக்கே இரண்டு கிலோ மீட்டர் தூரத்திற்குக் குடிபெயர்ந்து சென்று வாழ்ந்திருக்கலாம்

இக்குடிப்பெயர்ச்சி கிட்டத்தட்ட 300 ஆண்டுகளாகக் கொஞ்சம் கொஞ்சமாக நடந்திருக்க வேண்டும்.

இவ்வூகத்தை உறுதிப்படுத்துகிறது பாச்சலூர்ப் பதிகம். இப்பதிகத்தில் காப்புச் செய்யுளுடன் சேர்த்து மொத்தம் 12 செய்யுள்கள் உள்ளன. அனைத்தும் அறுசீர் ஆசிரிய விருத்தப் பாக்களால் ஆகியவை; பொருள் செறிவும், ஓசை நயமும் பெற்று விளங்குகின்றன.

பாச்சலூர்ப்பதிகம் கி. பி. 1896 ஆம் ஆண்டு மைலம் சுப்பிரமணிய சுவாமிகளால் பார்வையிடப்பட்டு, சென்னை இட்டி பார்த்தசாரதி நாயுடு அவர்களால்அவர்தம்பத்மநாபவிலாச அச்சுக் கூட்டத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் காணப்படவில்லை. (இதன் கைபெழுத்துப் பிரதியை எனக்குக் கொடுத்து உதவியவர் ஓய்வு பெற்ற கிராம சேவகர் பாச்சல் திரு. ஆர். அத்தியப்பன் அவர்கள்).

பாச்சலூர்ப் பதிகத்தின் காப்புச் செய்புள் முருகன், விநாயகர் வணக்கத்துடன் காணப்படுகின்றது. மற்ற பாடல்கள் அந்தணர்-அந்தணர் அல்லாதோர் இடையே அக்காலத்தில் நிலவி வந்த ஏற்றத் தாழ்வு தேவை யற்றது என்பதையும், 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்னும் கருத்தையும் தன்னுள் கொண்டுள்ளது.

ஒவ்வொரு பாடலும் 'பாச்சலூர் பதிகத்தாரே' என்று முடிகிறது.

தற்போது மூனுசாவடி பயணியர் மாளிகை இருக்கும் இடம் முன்பொரு காலத்தில் சேர, சோழ, பாண்டியர் சந்தித்த இடம் என்னும் மரபுச் செய்தி ஒன்று உண்டு. மூன்று பங்களாக்கள் இங்கு இருந்த காரணத்தினாலேயே இதற்கு 'மூன்று சாவடி' என்னும் காரணப் பெயர் ஏற்பட்டிருக்கிறது.

இந்நினைவுகள் நமது மனதில் அலைபாய, இராசிபுரத்திலிருந்து வரும் 5 எண்ணுள்ள பேருந்தில் ஏறிக்கொள்கிறோம். 15 நிமிடப் பயணத்திற்குப் பிறகு பாச்சல் சிற்றூரில் இறங்கிக் கொள்கிறோம்.

பாச்சல் போகும் பாதையில் நடந்து, ஏரியின் தென் கரையில் உள்ள செல்லாண்டியம்மன் கோயிலை அடைகிறோம். கோயில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இக்கோயிலின் முன்பு கிழக்கு நோக்கி அமைந்திருப்பதுதான் புகழ் பெற்ற பாச்சல் குதிரைச் சிற்பமாகும்.

இக்குதிரைச் சிற்பம் ஒரே கல்லால் வடிக்கப்பட்டுள்ளது தரை மட்டத்திலிருந்து பீடத்துடன் 8 அடி உயரமும் குறுக்கு நீளம் 6 அடியும், உடல் பருமன் 2 அடியும் கொண்டது. இதன் உடலில் செதுக்கப்பட்டுள்ள அணிகலன்கள் கண் கொள்ளாக் காட்சியாகும். இதன் கழுத்தில் தாடியுடன் கூடிய 16 கபாலங்கள் கொண்ட மாலையும், சலங்கை மாலையும், மற்றும் பல அணிகலன்களும், சேணமும், கடிவாளத்தின் கழுத்தில் கீழ்நோக்கித் தொங்கும் குஞ்சங்



புதர்களுக்கு இரையாகிக் கொண்டிருக்கும் ஆனிலையப்பர் கோயில் - மூனுசாவடி.

களும் வேறு எங்கும் காண முடியாத சிற்பக் கலைக் கருவூலமாகும்.

குதிரைச் சிற்பத்தின் கடிவாளத்துடன் செதுக்கப்பட்டுள்ள கயிற்றில் படி முடிச்சு (Reef Knot) காணப்படுகின்றது. இது போன்ற முடிச்சு கோயில் தூண்களின் பலகை என்னும் பகுதிகளிலும், கோபுரத்தின் கீழ் போடும் கல் தூலங்களிலும் செதுக்கப்பட்டது வழக்கமாக இருந்திருக்கிறது.

குதிரையின் முன்னங்கால்களில் சாய்த்து வைக்கப்பட்டுள்ள புடைப்புச் சிற்பத்தில், இப்பகுதியை ஆண்ட குறுநில மன்னன் என்று கருதத்தக்க ஒருவனுடைய உருவம் தலைப்பாகை, நெற்றியில் நாமம், வலது கையில் வாள், இடது கையில் மலர், காதணிகள், மார்பில் முப்புரி நூல், அணிகள், முகத்தில் தாடி மீசை ஆகியவற்றுடன் காணப்படுகின்றது.

சமீப காலமாக இக்குதிரையின் வேலைப்பாடு ஆய்வாளர்களின் கவனத்தைக் கவர்ந்து வருகின்றது.

செல்லாண்டியம்மன் கோயில் வாசலின் முகப்பில் காணப்படும் கஜலட்சுமி சிற்பத்தின் இடது புறம் உள்ள கல்லில் தமிழ்க் கல்வெட்டு காணப்படுகின்றது. இது வேறோர் இடத்திலிருந்து கொண்டு வந்து, இக்கோயில் கட்டப்பட்டபோது இடையில் வைத்துக் கட்டப்பட்டுள்ளது.

செல்லாண்டியம்மன் கோயில் முகப்பு வாசற்படியின் இடது பக்கம் எழுத்துகள் நிரம்பிய உடைந்த கல் ஒன்று கிடக்கின்றது. இதில் அமைந்துள்ள வாசகம்.

'து ..ணை வ(ல்லவரை)யர் நாட்டு பிரம்ம தேயம் பாச்சிலான உலகளந்தான் சருப்பேதி மங்கலத்து ஏரியும் இவ்வுடைப்பும் முங்கரை நாட்டான் இவ்வூர் மூன்று கரை நாட்டார் ரெக்ஷை'.

பாச்சிலில் இன்றுள்ள ஏரி பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே 'பாச்சிலான உலகளந்தான் சதுர்வேதி மங்கலத்து ஏரி' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. 'மூன்று கரை நாட்டார் ரெக்ஷை' என்று இறுதியில் முடிகின்றது. கொங்கு நாடாகிய இந்நாட்டின் மற்றொரு பகுதிக்கு 'ஏழு கரை நாடு' என்று பெயர் வழங்கப்பட்டு வந்துள்ளது.

இராசிபுரம் - சேந்தமங்கலம் பேருந்துப் பாதையில் உள்ள சிங்களாந்தபுரத்திற்கு அண்மையில் 'குணப்பாச்சில்' என்னும் ஊர் உள்ளது இதற்கு மேற்கில் 'குடப்பாச்சில்' என்று முன்பு அழைக்கப்பட்ட ஊரே இன்று பாச்சல் என்று சுருங்கி விட்டது. (குணப்பாச்சில்=கிழக்குப் பாச்சில்; குடப்பாச்சில்=மேற்குப் பாச்சில்).

இராசிபுர நாட்டின் 24 பிரிவுகளுள் பாச்சிலும் ஒன்று என்று 'கொங்கு மண்டல ஊர்த் தொகை' என்னும் நூல் கூறுகிறது. இராசிபுர நாட்டின் எல்லைகளாவன: கிழக்கே கொல்லி மலை, மேற்கே அலைவாய் மலை, வடக்கே போக மலை, தெற்கே நயனமலை. இம்மலை இந்நாளில் நைனா மலை என்று வழங்கப் படுகிறது.

செல்லாண்டியம்மன் கோயில் கட்டும் பணி நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, அதற்குரிய கற்கள், சுண்ணாம்பு, மணல் முதலிய பொருள்களை ஏற்றி வந்த வண்டியில் பூட்டப்பட்ட குதிரை இரவில் நான்கு புறமும் சென்று புல்மேய்ந்ததாகவும், மக்கள் கண்களில் அதுபட்டு விடவே அது ஓடி வந்து கோயிலின் முன்பு நின்று கொண்டதாகவும் செவி வழிச் செய்தி வொன்று இப்பகுதி மக்களிடம் வழங்கப்பட்டு வருகிறது.

பாச்சலூர் செல்லாண்டியம்மனின் மேல் பாடப்பட்ட தாலாட்டுப்பாட்டு ஏட்டளவில் உள்ளது. இதனைப் பாடிய ஆசிரியரின் பெயர் தெரியவில்லை ஆனால் இப்பாடலின் ஒரு பகுதி,

"பங்கறிகர் ராசிவளர் நாட்டில் வாழும்
விளியக்குலக் கோத்திரம்
பன்குலர் மாலையணிந்த வேலபூபன்
பூங்கமல இருதமை கருணைகூர்ந்த
புத்திரனும் பழநிவேல் பூபன்
வாழ்க" (23)

என்று இராசிபுர நாட்டின் தலைவனாக ஒரு காலக்கட்டத்தில் விளங்கிய, விளியக்குலக் கோத்திரத்தில் தோன்றிய பழநிவேல் பூபனைச் சிறப்பித்துப் பாடுகிறது.

இத்தாலாட்டின் மற்றொரு பகுதி செல்லாண்டி அம்மன் ஊசலில் ஆடும் சிறப்பைப் பேசுகிறது

"தங்கநவ ரத்தின மணியசைய
தூயசந்திர விமல முகங்களுமாட
தங்குநிலை மங்கிலியம் வலிமை
கூர்ந்து
சமறிமிகு பலபணி மின்னியாட"10
"பொங்குநிறை கன்னியர்கள் ராகம்பாட
புகழ்கெருட கிம்புருடர் கீதம்பாட
செங்கமல விரிபாச்சல் கரையைச்
சூழ்ந்த
செல்லாண்டி அம்பிகைக்கு
ருடிஊசல்"(11)

என்பவை சில கண்ணிகள்.

செல்லாண்டியம்பிகை விளியக் குலத்தினரின் குலதெய்வம்.

தேவாரம் பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், தமது, திருநாட்டியத்தான் பதிகத்தில் (பாடல்: 6) பாசலை,

"படப்பாற்று அண்மையில் நான்பட்டது
எல்லாம் படுத்தாய் என்று அல்லல்
பறையேன்
குடப்பாச்சில் உறைகோக்குளிர்வானே
கோனே கூற்று உதைத்தானே
மடப்பால் தயிரொடு நெய்மகிழ்ந்து
ஆடும் மறை ஓதி, மங்கை பங்கா
நடப்பாய் ஆகிலும் நடப்பன் உன்
அடிக்கே நாட்டியத்தான்குடி*நம்பி"

(*இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் நாட்டியத்தான் குடி இரயில்வே நிலையத்துக்கு வடமேற்கே, சுமார் 1 மைல் தொலைவில் உள்ளது. கோட்புலி நாயனாரின் பிறப்பிடம் இறைவன் பெயர்: இரத்தினகிரி நாதர்; இறைவியின் பெயர்: மலர் மங்கை நாயகி)

என்று குறிப்பிடுகிறார் என்றால் இவ்வூர் கி. பி. 7 ஆம் நூற்றாண்டு வாக்கில் எவ்வளவு சிறப்புப் பெற்றிருந்தது என்பது விளங்கும். ★




மச்சாவதாரம் - வாமன அவதாரம், லக்ஷ்மண் ஜ்வாலா - ரிஷிகேஷ்.
திருமதி: எம். ராஜலக்ஷ்மி - மங்கலம்.

# அருட் பிரகாச வள்ளல்

அகத்தே கறுத்துப் புறத்தே
வெளுத்திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத்து அடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று
மகிழ்ந்திடுதற்கென்றே, எனையிந்த
யுகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே.

என்று பாடி வாழ்ந்த வள்ளலே சிதம்பரம் இராமலிங்கம் ஆவர். இளமையில் உலகியற் கல்வியில் விருப்பமில்லை. இறைமை உணர்விலேயே திளைத்திருந்தார். அன்னுருக்குத் திருமணமான போதிலும் இல்வாழ்வில் பற்றின்றி இறைமை உணர்வினைப் பரப்புவதிலேயே வாழ்நாளைக் கழித்து வந்தார். அடிகள் சமய உலகினில் புரட்சிகரமான கொள்கைகளை வகுத்து நம்மையெல்லாம் சிந்திக்கச் செய்தவர். சமரச சன்மார்க்கம், ஆன்ம நேய ஒருமைப்பாடு, சீவகாருண்ய ஒழுக்கம் போன்றவற்றை ஏனையோர் குறிப்பிட்டுச் சொன்னதைவிட எளிய முறையில் உள்ளங்கொள்ளும் வகையிலே எடுத்துச் சொன்னவர் அருட்பிரகாச வள்ளலார் என்றால் அது மிகையாகாது.

உலகினர் இதனை உணரவேண்டும், மண்ணுயிர்களிடத்தில் இரக்கம் காட்டி வாழவேண்டும் என்பது வள்ளலாரின் வேண்டுகோள். இதனால் தான் "வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்று பாடிச் சென்றார். நாயன்மார்களிடம் அடிகள் கொண்டிருந்த அன்பு பெரிது.

வள்ளலார் பாடிய பாடல்களை 'அருட்பா' என்று சொல்லுவர். வள்ளலார் கையொப்பமிடும் போது சிதம்பரம் இராமலிங்கம் என்றே கையொப்பமிடுவார். மக்கள் இவரை வள்ளலார் என்றே அன்போடு அழைக்கலாயினர். அப்பெயரே இன்றளவும் நிலைத்துவிட்டது. வள்ளலார் நமக்கு வகுத்தளித்த வழிபாட்டு நெறியில் 'சோதி வணக்கத்தை'ச் சிறப்பாகக் கொள்ளலாம். அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை என்பது அடிகள் நமக்கு வலியுறுத்திச் சொன்ன வாக்காகும். தைப்பூச நாளே இராமலிங்கர் சித்தி பெற்ற நாளாகும். வடலூரில் ஆண்டு தோறும் தைப்பூச நாளன்று சோதி வழிபாடு நடைபெற்று வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

எல்லாரும் எல்லாமே அறிந்தவர் தாம் என்றாலும் அறிந்தவற்றைத் திரும்பத் திரும்பப் படிக்கும் போது புதுப்புதுக் கருத்துகள் தோன்றலாம். அறியாதவர்கள் அறிந்து கொள்ள இது ஒரு வாய்ப்பாகும். இதன் மூலம் உயிர்களிடத்தில் கருணை காட்ட வேண்டும் என்ற உணர்வு எழ வேண்டும். அது எழுந்தாலே இக்கட்டுரை எழுதப் பெற்றதன் நோக்கம் நிறைவேறியதாகும்.

**கண்ணாடியில் இறைவன் காட்சி:**

கண்ணாடி முன் காட்சி தந்தருள் என முருகனை உளமுருக வேண்டினார்; அதுபோலவே கண்ணாடியில் முருகன் தோன்றினான். ஆறு முகத்தோடும் பன்னிரு தோள்களோடும் வேலோடும், மயிலோடும், கோழிக் கொடியோடும் தணிகை முருகன் காட்சி தந்தான். வள்ளற் பெருமான் கண் குளிரக் கண்டார். அதுவரை காணா தனக்கண்டார்; களித்தார்பண்ணுற்ற பாடலால் பாடித் துதித்து மகிழ்ந்தார்.

சாந்தம் புத்தூரில் வேடன் ஒருவனுக்குச் சிவ பெருமான் கண்ணாடியில்தோன்றி அருள் செய்த நிகழ்ச்சியினைத் திருவாசகத்தில் மாணிக்க வாசக அடிகள் குறிப்பிட்டுச் சென்றது சிந்திக்கத் தக்கது.

தர்ப்பணம் அதனில் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற்கு ஈந்த விளைவும்.
—2 கீர்த்தித்திரு அகவல் 31-32

**ஓதாதுணர்தல்:**

அடிகள் பள்ளி செல்லாமல், ஆசிரியரிடம் பாடங்கேட்காமல் கற்க வேண்டிய அனைத்தும் இறைவனிடமே கற்றுக் கொண்டார். ஐயமனைத்தும் இறைவனிடமே கேட்டுத் தெளிந்தார். இவ்வாறு ஓதாது உற்ற சுவைகளையெல்லாம் உணர்ந்து கொண்டார். இதனை அவர் தம் அருட்பா அடிகளிலேயே காணலாம்.

---

புலவர். திரு. பொ. திருஞானம்,
வெண்பாவூர்.

---

நின்னுடைய அருளால்
கற்றது நின் னிடத்தே பின்
கேட்டது நின்னிடத்தே"
4 அன்புமாலை 16

ஆடித்திரியும் பருவத்தில் பாடிப் பணியும் பக்குவத்தை இறைவன் அருளியதை அடிகள் பல பாடல்கள் மூலம் பாடி வியந்து போற்றுகின்றார்.

பாடும்வகை அணுத்துணையும்
பரிந்தறியாச் சிறிய
பருவத்தே அணிந்தணிந்து
பாடும் வகை புரிந்து.
—4 அன்பு மாலை - 14

**அடியாரின் பசி பொறுக்காதவன்:**

அடிகள் ஒற்றியூர்க் கோயிலின் மண்டபத்தில் பசியுடன் படுத்துறங்கி விட்டார். அன்பர்கள் சிலரும் உடனிருந்தார்கள். அடிகள் இடையில் விழித்துப் பார்த்தபோது கடவுளே

# காலக் கணக்கு

சென்ற நூற்றுண்டு வரை இந்தியக் காலக கணக்குத்தான் வழக்கத்தில் இருந்து வந்தது தற்போது உள்ள காலக கணக்கிற்கும் இந்தியக் காலக் கணக்கிற்கும் வேறுபாடு உண்டு.

இந்தியக் காலக் கணக்கு

| | | |
|---|---|---|
| 60 விநாடி | — | 1 நாழிகை |
| $3\frac{3}{4}$ நாழிகை | — | 1 முகூர்த்தம் |
| $7\frac{1}{2}$ நாழிகை அல்லது 2 முகூர்த்தம் | — | 1 ஜாமம் |
| 8 ஜாமம் | — | 1 நாள் |
| 7 நாள் | — | 1 வாரம் |
| 2 பஷம் | — | 1 மாதம் |
| 2 மாதம் | — | 1 ருது |
| 3 ருதுக்கள் | — | 1 அயனம் |
| 2 அயனம அல்லது 12 மாதம் | — | 1 வருடம் |
| 1 அயனம் | — | 6 மாதம் |
| 60 வருடம் | — | 1 சுற்று. |

தற்போது உள்ள காலக் கணக்கு

| | | |
|---|---|---|
| 60 நொடி | — | 1 நிமிடம் |
| 60 நிமிடம் | — | 1 மணி |
| 24 மணி | — | 1 நாள் |
| 7 நாள் | — | 1 வாரம் |
| 4 வாரம் | — | 1 மாதம் |
| 12 மாதம் | — | 1 வருடம் |

இந்தியக் காலக் கணக்கிற்குச் சரியான தற்போது உள்ள காலக் கணக்கு

| | | |
|---|---|---|
| $2\frac{1}{2}$ விநாடி | — | 1 நிமிடம் |
| 24 நிமிடம் | — | 1 நாழிகை |
| $2\frac{1}{2}$ நாழிகை (60 நிமிடம்) | — | 1 மணி நேரம் |
| 60 நாழிகை (24 மணி) | — | 1 நாள் |
| 30 நாழிகை (12 மணிநேரம்) | — | 1 பகல் அல்லது 1 இரவு |
| 2 முகூர்த்தம் (அ) 1 ஜாமம் | — | 3 மணி நேரம் |
| 1 நாள் | — | 8 ஜாமம் (பகல் 4 ஜாமம்) (இரவு 4 ஜாமம்) |

6–00 மணி முதல் 9–00 மணி வரை — 1வது ஜாமம்
9–00 மணி முதல் 12–00 மணி வரை — 2வது ஜாமம்
12–00 மணி முதல் 3–00 மணி வரை — 3வது ஜாமம்
3–00 மணி முதல் 6–00 மணி வரை – 4வது ஜாமம்

(பகல், இரவு, இரண்டிற்கும் பொதுவானவை)

இவ்வாறு நேரம் முன் காலங்களில் கணக்கிடப்பட்டது. இன்றும் பஞ்சாங்கங்கள் இந்தியக் காலக் கணக்கின்படிதான் கணிக்கப்படுகின்றன

இந்தியக் காலக் கணக்கில் 1 நாள் என்பது முதல் நாள் சூரிய உதயம் முதல் மறுநாள் சூரிய உதயம் வரை கணக்கிடப்படும்.

தற்போது உள்ள காலக் கணக்கில் 1 நாள் என்பது இரவு 12 மணி முதல் மறுநாள் 12 மணி வரை கணக்கிடப்படுகிறது.

தகவல்: பூம்புகார். ஜி. சீனிவாசன்.

கோயிற் பூசகர் வடிவிலே வந்து உணவளித்துச் சென்றுன். உணவு கொண்டு வந்து அப்பூசகர் இரண்டு நாளாக ஊரிலில்லை என்பது பிறகு தான் தெரிய வந்தது.

இறைவன் அடியார்களின் பசியினைப் பொறுக்கப் பெறுதவன. ஞான சம்பந்தக் குழந்தை பசியால் அழுதபோது இறைவி ஞானப்பாலூட்டினுள். இது நடந்தது சீர்காழியில். திருப்பைஞ்ஞீலியில் அப்பர் பசியால் வாடினுர். இதனைக் காணச் சகியாத இறைவன் கட்டுச் சோறளித்துப் பசியினைப் போக்கினுன்

திருக்கச்சூரில் சுந்தரர் பசியால் துன்புற்றுர். அப்போது இறைவன் பிச்சையெடுத்து வந்து உணவளித்தான். ஞான சம்பந்தர்க்கு இறைவி பொன் வள்ளத்தால் பாலூட்டினுள். அதுபோலவே வள்ளற் பெருமானுக்கும் இறைவி வள்ளத்தால் அமுதளித்தார். இறைவன், இறைவி இருவருமே இராமலிங்கர் பசித்தபர்ந்தபோது உணவளித்ததை நோக்குங்கால வியக்காமலிருக்க முடியாது. இவை அருளாளர்களுக்கு மட்டுமே நிகழக்கூடிய செயல்களாகும்

**காலைச் சுற்றிய பாம்பு**

அடிகள் சொற்பொழிவுக்காக வெளியூர் செல்வதுண்டு. ஒரு முறை வியாசர்பாடிக்குச் சென்று சொற்பொழிவு செய்து விட்டு சென்னை திரும்பினுர்கள். வழியில் இருந்த பாம்பு அடிகளின் காலைச் சுற்றிக் கொண்டது. உடனிருந்தவர் அஞ்சி ஓடிவிட்டனர். ஆனுல அடிகள் மட்டும் அசையாமல் அப்படியே நின்றுர். அடிகளாரும் அதனைப் போகும்படி ஆணையிட்டனர். அந்த பாமபு ஊறு ஏதும செய்யாமல் சென்றுவிட்டது. இந்நிகழ்ச்சியை அறிவித்தவர் வளளற் பெருமானுடன் சென்றவரான திருமலை மகாவித்துவான் தணிகாசல முதலியார் ஆவர்.

**எதிலும் இரக்கம்**

காக்கைகள் கரையக் கேட்டால் கலங்கி விடுவார். பருந்தின் கடுங்

குரலைக் கேட்டால் வருந்துவார். ஆந்தை அலறினால் அஞ்சுவார். சாக்குருவி கத்தக் கேட்டால் மனந் தளர்ந்து விடுவார். பாம்புகளைக் கண்டபோதெல்லாம் நடுங்குவார். தீமை செய்வாரையும், பெருஞ் சொல் சொல்வாரையும் கண்டு உள்ளம் வருந்தத் துடிப்பார். உயிர்களுக்குத் தீங்கு வரக் கூடாது என்பதிலே அடிகள் பெருவிருப்பங்கொண்டு இருந்தார்.

**அருட்பிரகாசரின் அன்புரை**

கடவுள் ஒருவர், அருட்பெருஞ் சோதியர். சிறு தெய்வ வழிபாடு தேவையில்லை. தெய்வத்தின் பெயரால் உயிர்ப்பலி கூடாது. புலால் உணவு கூடாது. உயிர்களின் பசியினைப் போக்குதல் சீவகாருண்ய ஒழுக்கமாகும். இதுவே பேரின்ப வீட்டின் திறவு கோலாகும். எவ்வுயிரையும் தம்முயிர் போல் எண்ண வேண்டுமபோன்றன அடிகளின்சமரச சுத்த சன்மார்க்க நெறிகளாம்.

**அமுதசுரபியாதல் :**

அறச்சாலையில் இரவு உணவு நேரத்தில் பலர் உணவுண்ண வந்து விட்டனர். சமைத்த உணவு சிறிதளவே உள்ளதென்றும், வந்திருக்கின்றனர்களுக்கு உணவு போதாதென்றும் பொறுப்பாளர் திரு சண்முகம் பிள்ளை அவர்கள் அடிகளிடம் கூறினார்கள். அடிகளார் உடனே எழுந்தார். பீச் எனக் கூறி அனைவர்க்கும் இலை போடும்படி ஆணையிட்டார். அடிகள் தம் கையால் அனைவருக்கும் உணவு பரிமாறினர். அனைவரும் உணவு உண்டாயிற்று. எனினும் உணவு மீதமிருந்தது.

**அரிசி வண்டி வருதல்:**

அறச்சாலையில் அரிசியில்லை என்பதை ஒருநாள் சண்முகம் பிள்ளை அடிகளாரிடம் கூறினர். இதனைக் கேட்ட அடிகள் தனியாக அமர்ந்து தியானம் செய்தார். பிறகு, 'வேண்டிய அரிசியும், மற்ற பொருள்களும் நாளைக்கு வரும்' என்று கூறினர். அதுபோலவே மறுநாள் திருத்துறையூரிலிருந்து ஓர் அன்பர் மூன்றுவண்டிகளில் அரிசியும் மற்ற பொருள்களும் கொண்டு வந்து கொடுத்தார். அவர் கனவில் இறைவன் வந்து ஆணையிட்டதாகக் கூறிச் சென்றார்.

**மழை பொழிந்தது:**

மக்கள் மழையில்லாமல் வருந்திக் கொண்டிருந்தனர். வள்ளலார் ஒரு செம்பு தண்ணீரைக் கொண்டுவந்து தமது காலில் ஊற்றும்படிக் கூறினர். அன்பர்கள் அவ்வாறே செய்தனர். சிறிது நேரத்தில் மேகங்கள் திரண்டு நான்கு செவி மழை பொழிந்தது. இதையறிந்த புதுப்பேட்டை மக்கள் அடிகளைக் கண்டு தங்கள் ஊரில்மழையில்லை என்று கூறினர். அடிகள் தம் தலையில் ஆறு குடந்தண்ணீரை ஊற்றும்படிக் கூறினர். ஊர் ஊரில் நல்ல மழை பொழிந்தது, ஊர்செழித்தது.

**புலால் மறுத்தல்:**

புலாலுண்பதை அடிகள் வன்மையாகக் கண்டிக்கின்றார். மக்களை இரு இனங்களாகப் பிரித்தார். 1. அக இனம், 2. புற இனம். புலால் வெறுத்தவர் அக இனத்தைச் சார்ந்தவர்; புலால் உண்பவர் புற இனத்தைச் சார்ந்தவர். உயிர்க்கொலையும் புலைப் புசிப்பும் உடையவர்களெல்லாம் உறவினத்தாரல்லர், அவர் புறஇனத்தார் என்று இறைவன் கூறியதாக அடிகள் குறிப்பிடுகின்றார். புலால் உண்பவரை சன்மார்க்க சங்கத்தில் சேர்த்துக்கொள்வது இல்லை. புலால் உண்ணும் மக்களைக் காண்கின்ற போது, 'எலும்பெல்லாம் கருக இளைத்தேன்' என அடிகள் இறைவனிடம் விண்ணப்பிக்கிறார்.

**இறைவன் ஆணை:**

உலகில் பல சமயங்கள், மதங்கள் உள்ளன. அவற்றின் பெயரால் போர் செய்து இறந்து இறந்து வீணு காதீர்கள். உண்மை நெறியை உணராமல் உள்ளீர்கள், உங்கள் வாணாள் வீணாகாத வண்ணம சன்மார்க்க நெறியனை எடுத்தியம்பி மக்களை இன்புறச் செய்வாயாக. பொது நெறியில் மக்களை ஈடுபடுத்துவாயாக. என் பிள்ளையாதலால் உரிமையுடன் இவ் வேலையைச் செய்யச் சொன்னேன். மனத்தில் வேறெதும் எண்ணாதே என்று இறைவன் வள்ளற்பெருமானுக்குக் கட்டளையிட்டான்.

"என் பிள்ளை ஆதலாலே
இவ்வேலை புரிக என்றிட்டனம்
மனத்தில்வே றெண்ணற்க"
6 (இடை) நடராஜபதிமாலை 27

மனிதர்களாகப் பிறந்து விட்டால் மட்டும் போதாது. இதுபோன்ற அடியார்களின் வரலாற்றினைப் பார்க்கவேண்டும். அதன்படி நடக்க ஓரளவேனும் முயலுதல் வேண்டும். இப்படி ஒவ்வொருவரும் நினைக்கவும் சொல்படவும் நேரிடின் நாட்டில் உயிர்கள் படுந்துயரம் குறையும். உயிர்கள் மகிழ்ந்தால் உலகம் உய்யும்; அடிகட்குத்தானே அவ்வாணை நமக்கென்ன என்று எண்ணற்க. ★

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள் அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும். இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினால், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# ஸ்ரீ வைராக்ய பஞ்சகம்

உயர்வற மதிநலம் அருளப்பெற்ற பரம பாகவதர்கள் உலக விஷயங்களில் ஆசையில்லாதவர்கள். மானிடரை ஊனுக்கும் உடைக்கும் போற்றும் அவல நிலையைக் கடிபவர். அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்பனையே பற்றி இவ்வுலகப் பற்றைவிட்டவர்கள். ஆனத செல்வத்து அரம்பையர் தற்சூழ வாழுனும் செல்வமும் மண்ணரசும் வேண்டாதவர்கள்.

ஸ்ரீஸ்வாமி தேசிகன் இவ்வாறான வைராக்யமுடையவர். காஞ்சிப் பேரருளாளனைப் பரிபூர்ணமாய் அனுபவித்துக் கொண்டிருந்த காலை, ஸ்வாமியின் பால்ய நண்பர் வித்யாரண்யர் விஜயநகரப் பேரவை ஆஸ்தான வித்வானாயிருந்தார். அவர் ஸ்வாமிகளின் மீது பேரன்பு கொண்டவர். அரசனிடம் தனக்குள்ள செல்வாக்கைக் கொண்டு ஸ்வாமிக்கு உதவ விரும்பி, அவரை விஜயநகருக்கு எழுந்தருளப் பிரார்த்தித்துக் கடிதம் அனுப்பினார்.

ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் அத்திகிரி அருளாளனையே பெரும் செல்வமாகக் கொண்டவர். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி 'நிதி சால சுகமா? ராமுநி சந்நிதி சேவ சுகமா?' என்று கூறி சரபோஜி அரசனது பொற்குவியலைத் தீண்ட மறுத்தார். அதுபோல் ஸ்வாமிதனது வைராக்யத்தை ஐந்து ஒப்பற்ற சுலோகங்களாய் வடித்து அனுப்பினார்.

எத்துணைத் துன்பம் வந்துற்ற போதும், பயனற்ற இம்மைச் செல்வத்தைப் பெற யாசிக்காத நிலையைக் கூறி, தமக்குப் பேரருளாளனே அழியாச் செல்வமெனக் கூறித் தலைக் கட்டுகிறார்.

சுதாமன் என்ற குசேலன் தன் பால்ய நண்பனை ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு ஒரு பிடி அவலைச் சமர்ப்பித்தார். அதையே பேருபகாரமாகக் கருதிக் கோவிந்தன் தன் கருணைப் பார்வையால் குபேரச் செல்வத்தை அவனுக்களித்தான். எம்பிரானை விடுத்து ஒரு சிறு பகுதியை ஆளும் செருக்குடை மன்னரைப் புகழ்ந்து பெரும்பொருள் பெறக் கருதோம் என்கிறார்.

இவ்வுலகில் வாழ வயலில் சிந்திய தான்யம், ஒரு கை நீர், மானத்தைக் காக்கக்கந்தத் துணி போதுமே. இவ்வாறிருக்க அந்தோ! உண்டி உடைக்காக அரசனைப் புகழ்ந்து இழிநிலை அடைகிறார்களே என வருந்துகிறார்.

ஐயா! ஜாடராக்னி நீர் வயிற்றில் பெரும் நெருப்பாய் தகிக்கிறது. கடலைவற்றச் செய்யும் பெண் குதிரை முகமுடைய வடவாமுகாக்நி போல் வருத்துகிறதே என் செய்வோம் சிலர் கேட்கலாம். ஸ்வாமி கூறுகிறார் 'ஜாடராக்னி எரிந்து கொண்டே இருக்கட்டுமே. எத்துணைப் பசி ஏற்படினும் அரசனைப் புகழோம். மாலையில் மலரும் நறுமண மல்லிகை போன்ற எம்வாக்கு எம்பெருமானுக்கே உரியது.' என்ன பெருமிதம், அவர் தம் வாக்கில்

அரசனது மனைத்திண்ணையில் அவனது சௌகரியத்தையும் நேரத்தையும் எதிர்பார்த்திருக்கும் இழிநிலைக்கு ஒரு கை கூப்பு! பாரதப் போரிலே பார்த்த சாரதியாய் காட்சியளித்து உலகைக் காத்த பெருநிதி என் கையில் உள்ளதே! அது ஒன்றே போதும்.

இறுதியாக ஸ்வாமி தேசிகன் உறுதியாகக் கூறுகிறார். 'எனது தந்தையோ, யானோ சம்பாதித்த பொருள் ஒன்றுமில்லைதான். ஆனால் என்ன? எனது பாட்டன் பிரம்மா அசுவமேத வேள்வி செய்து ஹஸ்திகிரி உச்சியில் சம்பாதித்து வைத்துள்ள பெருநிதியாம் பேரருளாளன் என்னும் அழியாச் செல்வம் உள்ளதே! பாட்டன் சொத்து பேரனுக்கன்றோ? வேறு அழியும் செல்வம் எனக்கு எதற்கு?' என முழங்குகிறார்.

கவி தார்க்கிக ஸிம்மமாகிய ஸ்ரீ ஸ்வாமி தேசிகனது இந்த வைராக்கியம், மனத்திண்மை, பரிபூர்ண ப்ரபத்தி நமக்கு வழி காட்டுவதாகுக. சகலத்தையும் துறந்து என்னையே சரணாக அடைபவரது நலனை நான் காக்கிறேன் என்ற ஸ்ரீ கிருஷ்ணனின் அருள் வாக்கிற்கு எடுத்துக் காட்டு ஸ்ரீ ஸ்வாமிகளின் வாழ்க்கையாகும்.

திரு. S. கிருஷ்ணமூர்த்தி
தேவகோட்டை.

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

: 8 :

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

**ஸ்ரீ வேங்கடேச சடகோப ஜீயர் ஸ்வாமி :**

இனித் திருமலையில் ஸ்ரீ பகவத் ராமானுஜமுனிவரால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ வேங்கடநாத(அப்பன்) சடகோப ஜீயர்ஸ்வாமியின் சரிதம் கூறப்படும். ஆதிசேஷாவதாரமாய் ஸகலதிவ்யதேச ரக்ஷணத்திலேயே ஊன்றியிருந்த ஸ்ரீபகவத் ராமானுஜ முனிவர் திருவேங்கடமலையாகிய திவ்யதேசத்தைக் குறித்து எழுந்தருளிய பல யாத்திரைகளுக்குள்ளே முதல் யாத்திரையில் விட்டலதேவனென்னும் ஓரரசனை மிகப் பிரிய தொண்டனாக ஆக்கிக்கொண்டு அவன்மூலமாக ஜீவனத்திற்காக இளையமண்ட்யமென்று பெயரைப் பெற்றதாய் ஆற்றுநீர்ப் பாய்ச்சலையுடைய கிராமமொன்றைக் கொடுப்பித்துத் தம்திருவடித்தாமரைகளைத் தஞ்சமாக அடைந்த சில ஸ்ரீவைஷ்ணவர்களைக் கீழ்த்திருப்பதியில் வசிக்கச்செய்து அவர்களுக்குத் தத்துவப் பொருள்கள் அனைத்தையும் உபதேசித்துக்கொண்டும், ஆழ்வார்கள் புராணப் பிரசித்தரான சுகர் முதலிய பரமருஷிகள் பிரகலாதன் முதலான பாகவதர்கள் அம்பரீஷாதி ராஜருஷிகள் ஆகிய இவர்கள் போன்று, ஆதிசேஷாவதாரமாகவும் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வந்த அப்ராக்ருதமான பகவான் விளையாடும் மலையாகவும் பகவானுடைய திவ்யமான திருமேனியாகவும் புராணத்தினால் அறியப்பட்ட திருவேங்கடமலையைத் தாமும் ஏற இசையாதவராய்க் கீழிருந்தே திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்துகொண்டும் அடிவாரமாகிய கீழ்த் திருப்பதியிலேயே சில நாட்கள் இருந்து, பின்பு முன்னொருகால் (ஸ்ரீரங்கத்தில்) திருவாய்மொழி காலக்ஷேப ஸமயத்தில் தாமே இட்ட ஆணையின்படி இங்கு வந்து நந்தவனம் ஏரி முதலியவற்றைத் தொண்டாகச்செய்து தினந்தோறும் நறுமணம் மிக்க திருத்துழாய் மலர் மாலை ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தினால் திருவேங்கடமுடையானை மகிழ்வித்து அதனால் மிகமிக வுயர்ந்து பரந்த பகவத்கருணையாகிய வெள்ளமானது தம்மேலே பாயப்பெற்ற அனந்தாழ்வான் பல ஸ்ரீவைஷ்ணவர்களுடன் திருமலையிலிருந்து இறங்கி வந்து வேண்டத் திருவேங்கடமலையேறிச் சென்று அங்குப் பெருமான்திருக்கோவிலின் தென்மேற்குத் திசையில் அவ்வனந்தாழ்வான் தமதாணையைப் பின்சென்று நிருமித்த தோட்டம் ஏரி முதலியவற்றைக் கண்டு மகிழ்ந்து தமது கருணையினால் குளிர்ந்த கடைக்கண்ணோக்கமாகிய பிரவாஹத்தினால் அவரை நனைத்தல் அணைத்தல் முதலியவற்றால் கொண்டாடி, ஸ்வாமிபுஷ்கரிணியில் நீராடி ஸ்ரீவராகப்பெருமானையும் திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, ஆளவந்தாரின் ஆணையின்படி வெகுநாட்களுக்கு முன்பே இங்கு வந்து பெருமாளுக்குத் திருமஞ்சனதீர்த்தம் கொண்டுவருதல் முதலான தொண்டுகளினால் திருவேங்கடவனை ஆனந்திப்பித்து வரும் தம் மாதுலராகிய (தாய்மாமன்) திருமலைநம்பிகளின் உத்தரவின்படி மூன்று நாட்கள் உண்ணாமலேயே திருமலையில் தங்கிப் பெருமாளைச் சேவித்துக்கொண்டிருந்து, பின்பு கீழிறங்கித் திருப்பதியிலேயே ஒரு வருஷகாலம் வாசம் செய்துகொண்டு திருமலைநம்பிகளிடத்தில் ஸ்ரீராமாயணத்தின் விசேஷார்த்தங்களைக் கேட்டறிந்து அவ்வப்போது நேர்ந்த சில கைங்கரியங்களையும் செய்துகொண்டிருந்து, மறுபடியும் ஸ்ரீரங்கம் செல்லவிரும்பித் திருமலையேறித் திருவேங்கடமுடையானைச் சேவித்து விடைபெற்றுக்கொண்டு, தமது மிகப் பிரிய சிஷ்யராய்த் தமது பிரிவைப் பொறாது வருந்தும் அனந்தாழ்வானுக்கு—தமது அர்ச்சைத் திருமேனி (விக்ரஹம்) ஒன்றை நிருமாணம் செய்வித்து அதைத் தாம் தழுவிக்கொண்டு கொடுத்தருளி, திருமலைநம்பிகளிடமிருந்து கோவிந்தபட்டரைத் (சிறிய தாயார் குமாரரான எம்பாரைத்) தாரைவார்த்துக் கொடுக்கப்பெற்று அவரையும் அழைத்துக்கொண்டு சிஷ்யபரிவாரத்துடன் சீரங்கத்துக்கே எழுந்தருளினார்.

அதன்பின்பு வேறொரு யாத்திரையில் அந்த பகவத் ராமானுஜமுனிவர்—சைவர்கள் திருவேங்கடமுடையானை வேறுதேவதையென்று வாதித்துச் செய்த கோலாகலத்தைப் பரிஹரிக்க வந்து அவ்வாரவாரத்தை அடியோடு பரிஹரித்துத்

ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

தேசாதிபதியாகிய யாதவமன்னனைத் தமக்கு அந்தரங்கத்தொண்டனாக்கி அவன்மூலமாக விமான மண்டப கோபுராதி கைங்கரியத்தைச் செய்து, கிரிமிகண்ட (புழுத்த கழுத்தை உடைய) சோழனது உபத்திரவம் காரணமாக எழுந்தருளிய திருச்சித்திரகூடநாதனை கோவிந்தராஜனைத் தேவாதிதேவனோடு கூடத் திருப்பதியில் பிரதிஷ்டை செய்வித்து, அப்பெருமானுக்குத் தேவியாக பூதேவியின் அவதாரமாய் இடத்திருக்கையில் செங்கழுநீர்மலர் விளங்கப்பெற்ற ஆண்டாளை அப்பெருமாளுக்கு வலதுபுறத்தில் பிரதிஷ்டை செய்வித்து, அவ்விருவரின் திருநாள் முதலியவற்றைத் திருவேங்கடமுடையானுடைய திருநாள்களுக்குத் தடங்கலில்லாதபடி நடத்த நியமித்து அவ்வப்போது ஏற்படும் பலவகைக் கைங்கரியங்களையும் செய்துகொண்டு இருந்து, மறுபடியும் திருவரங்கம் செல்ல விருப்பமுடையவராய்த் திருமலை நம்பிகளையும் அனந்தாழ்வானையும் முன்னிட்டுத் திருமலையில் இராமதூதரான அனுமாருக்கு முன்பு மடமொன்றைக் கட்டுவித்து முன்பு ஸ்ரீராமாயண சாத்துமுறை ஸமயத்தில் திருமலைநம்பிகள் தமக்குத் தந்தருளிய ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனை அதில் எழுந்தருளப் பண்ணித் தமக்குப் பிரதிநிதியாக அவரை ஆராதிப்பதன்பொருட்டும் திருவேங்கடமுடையானுடைய ஸகலகைங்கரியங்களையும் நிர்வகிப்பதன்பொருட்டும், திருமலையனந்தாழ்வானுடைய சிஷ்யராய்க் குருகுலவாஸத்தில் பேரன்பு கொண்டு அவருக்கு ஸகலகைங்கரியங்களையும் செய்வதொன்றிலேயே ஊன்றியவருமான ஒரு நைஷ்டிகப் பிரமசாரியை, பாரமேச்வர ஸம்ஹிதையில் கூறியவாறு விதிப்படியே காஷாயவுடை தந்து ஏகாங்கியென்று கூறத்தக்கவராகவும் ஸேனாபதிஜீயரென்னும் திருநாமமுடையவராகவும் அனுமனுருவம் பொறித்த மோதிரம் மணி கொடி திறவுகோல் முதலிய சில லக்ஷணமுடையவராகவும் செய்வித்து அம்மடத்தில் நிறுவி, யாதவராஜன் மூலமாக— திருவேங்கடமுடையான் கோவிலைச் சார்ந்த பரிஜனங்கள் பரிசாரகர்கள் அதிகாரிகள் இவ்வனைவரையும் எலலாவிதத்தாலும் அவ்வேகாங்கிக்கு அடங்கி நடப்பவர்களாகவும் அந்த ஏகாங்கியைத் திருமலைநம்பிகளுடையவும் திருமலையனந்தாழ்வானுடையவும் வசத்தில் இருப்பவராகவும் செய்வித்து அவ்விருவரின் அனுமதியைப்பெற்று மனத்தில் சிறிதும் கவலையின்றி ஸ்ரீரங்க நகரம் எழுந்தருளினார்.

அதற்குப் பிறகு பிறிதொரு யாத்திரையில் பூஜ்யரான அவ்விராமானுச முனிவர் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானைச் சேவித்துக்கொண்டிருந்து, அப்போது கலியுகத்தில் நாலாயிரத்திருநூற்றிருபதாண்டுகளும்சாலிவாஹன சகத்தில் ஆயிரத்து நாற்பத்தோராண்டுகளும் கழிந்து தமக்கு நூற்றிரண்டு பிராயங்கள் சென்றபடியை நினைத்து அனந்தாழ்வானை அழைத்து, வாரீர் அனந்தாழ்வானே நான் நூற்றிரண்டு வயதுடையவனாக ஆகிவிட்டேன். இனிமேல் இங்கு அடிக்கடி வந்து செல்லத்தக்க வலிமையுடையேனல்லேன். திருமலைநம்பிகளும் அவருடைய புத்திரர்களும் பரமபதம் சென்று சேர்ந்தனர். ஆகையால் இப்போது இங்கு நீர் ஒருவரே திருவேங்கடநாதனது கைங்கரியப்பொறுப்பை ஏற்று அறுபத்தாறு பிராயமுடைய முதியவராயிருக்கிறீர் ஆகையால் நீரே இங்குத் திருவேங்கடமுடையானுக்குத் தொண்டுபுரியும் அனைவரையும் நிர்வாகம் செய்யத் தகுதி பெற்றிருக்கிறீர்.

என்னுடைய பெருமாளான சக்ரவர்த்திதிருமகனரை ஆராதிப்பவராகவும் திருவேங்கடமுடையானது கைங்கரிய பாரத்தை வகிப்பவராகவும் என்னால் முன்பு நியமிக்கப்பட்டு நைஷ்டிகப் பிரமசாரியாய் உமது சிஷ்யராய் ஸேனாபதிஜீயரென்று மறுபெயரையுடைய இந்த விஷ்வக்ஸேன ஏகாங்கியாகிய தனிமனிதர் எல்லாக் கைங்கரியப் பொறுப்பையும் வகிக்க வல்லவரல்லர். ஆகையால் இவருக்குத் துறவறம் தந்து பிரதானராக்கி இவருக்கு உதவியாக மூவர் அல்லது நால்வர் ஏகாங்கிகளை ஏற்படுத்தி அவர்களை இத்துறவிக்கு அதீனராகச் செய்து அவர்கள் அனைவராலும் திருவேங்கடமுடையானது கைங்கரியத்தைச் செய்விக்க விரும்பியுள்ளேன்.

இப்படியே திருவாய்மொழி என்னும் தமிழ்வேதத்தில் மூன்றாம்பத்து மூன்றாந் திருவாய்மொழியில், 'எங்கெங்கு எம்பெருமான் செல்லுகின்றானோ அங்கங்கு முக்தியடைந்த ஜீவாத்மாவும் தொண்டுசெய்வதற்காக அப்பெருமானுடன் கூடச் செல்லுகின்றான்' என்று சுருதி கூறியபடியே, 'திருவேங்கடமுடையானுக்கு எல்லாவிடத்திலும் எல்லாக்காலத்திலும் எல்லாநிலையிலும் கூடஇருந்து செய்யத்தக்க எல்லா விதமான கைங்கரியங்களையும் செய்யக்கடவே'னென்று பாரித்த நம்மாழ்வாருடைய அப்படிப்பட்ட பாரிப்பைப் பூர்த்திசெய்வதற்காக அவர்பெயரைப் பெற்றவராக ஒருவரை இங்கு ஸ்தாபிதது்த் திருவேங்கடமுடையானுடைய ஸகலவித கைங்கரியங்களையும் செய்விக்க வேணுமென்று வெகுநாட்களாக விருப்பம் கொண்டிருக்கிறேன்.

ஆகையால் ஸேநாபதியென்னும் விஷ்வக்ஸேன ஏகாங்கியாகிய உமது இந்த சிஷ்யரையே துறவறம் பூணச்செய்து நம்மாழ்வாரின்பெயரை அவருக்குச் சாத்த ஆசைப்படுகிறேன் என்று கூறி, அனந்தாழ்வானுடைய அங்கீகாரத்தைப் பெற்று, விகாரி வருஷம் தை மாதம் சுக்லபக்ஷம் வெள்ளிக்கிழமை ஒரு சுபமுகூர்த்தத்தில் விஷ்வக்ஸேன ஏகாங்கிக்கு சாத்திரமுறைப்படி ஸந்நியாஸாச்ரமம்

தந்து திருவேங்கடநாத (அப்பன்) சடகோப ஜீயரென்று திருநாமம் சாத்தி அவரையே தமது மடத்தில் முக்கியமாகச் சக்ரவர்த்திதிருமகனுக்கு ஆராதனம் செய்யுமாறு நிறுத்தி, அவரைக்கொண்டே அனந்தாழ்வானுடைய சிஷ்யர் நால்வருக்கு ஏகாங்கிகாஷாயத்தைக் கொடுப்பித்து அவர்களைத் திருவேங்கடமுடையான் தொண்டிலேயே ஊன்றினவர்களாகவும் அந்த ஜீயரை அனுஸரித்துக்கொண்டிருப்பவர்களாகவும் செய்து இவர்கள் அனைவரையும் எல்லாப்படியாலும் அனந்தாழ்வானுக்கு வசப்பட்டவர்களாக ஆக்கி, யாதவராஜனை அழைத்து வாராய் யாதவமன்னனே நூற்றிரண்டு பிராயங்கள் செல்லப் பெற்றுக் கிழவனான நான் இனி இச் சரீரத்தை விடும் வரையில் ஸ்ரீரங்கத்திலேயே வாழ விழைந்துள்ளேன். அடிக்கடி இங்கு வந்துசெல்வதற்கும் எனக்கு வலிமையில்லை. ஆதலால் இவ்வனந்தாழ்வானை முன்னிட்டுக் கொண்டு, நான்கு ஏகாங்கிகளுடன் கூடிய இச்சடகோபஜீயர் மூலமாகத் திருவேங்கடமுடையானது கைங்கரியம் அனைத்தையும் நன்றாக நிறைவேற்றி வைக்கக்கடவாய்.

கலியின் பெருங்கொடுமையினால் ஆஸ்திகர்களுக்கும் துரோகசிந்தனை உண்டாகக்கூடும். ஆகையால் பற்றற்றவராய்க் கைங்கரியத்திலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கின்ற இவர்கள், கைங்கரியம் நன்றாக நடைபெறுகிறதா இல்லையா என்று ஆராயும்பொருட்டு நியமிக்கப்பட்டுள்ளனர். திருவேங்கடமுடையானுடைய பொருள்களின் வரவுசெலவுகள் திருவாபரணங்கள் முதலிய விஷயங்களில் அப்பன்சடகோபஜீயரைச் சேர்ந்த பரிஜனங்களாலும் ஒரு கணக்கு (அமூல்நாமா) எழுதப்படவேண்டுமென்று வரையறை செய்து கோவில்காரியம் பார்க்கும் அதிகாரிகளால் திருவேங்கடவனது செல்வம் களவுபோகாமலிருக்குமாறு உறுதி செய்யக்கடவாய்.

இந்நால்வர் ஏகாங்கிகளும் முன்பு நியமிக்கப்பட்ட ஸேநாபதிஜீயரென்ற ஒரு ஏகாங்கியின் ஸ்தானத்தில் ஒருவருக்கொருவர் உதவியாக அவ்வக் கைங்கரியங்களை ஸௌகமாகச் செய்வதன்பொருட்டு நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களுடன்கூட எல்லாக் கைங்கரியங்களையும் செய்யுமவராகவும் ஸகல கைங்கர்ய நிர்வாஹ பாரத்தை வகிப்பவராகவும் இச் சடகோபஜீயர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

இவ்வனந்தாழ்வானை முன்னேயிட்டுக்கொண்டு இவ்வனைவர்மூலமாகவும் முறைப்படிக் கைங்கரியங்கள் நடைபெறுமாறு பாதுகாக்கக் கடவாய்.

இவ்வனந்தாழ்வான் திருவேங்கடமுடையானது எல்லையற்ற கருணைக்குக் கொள்கலமானவர். நமக்கு மிகமிகப் பிரியரானவர். சாத்திரக் கருத்துக்களை நன்கறிந்தவர். சாஸ்திரங்களில் கூறிய தருமங்களையும் ஆசாரங்களையும் நிலைநிறுத்துவதில் ஆற்றல் படைத்தவர்; ஆகையால் இவர் ஆசார்யஸ்தானத்தை நிர்வஹிக்குமவராக (ஸ்தாலாசார்ய புருஷராக) நம்மால் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ஆகையால் இவரை முன்னிட்டு இவருடைய நியமனத்தின்படியே ஸகலசாஸ்திர தருமங்களும் வரம்பழியாமல் கோவிலில் நடக்கும்படி செய்யவேண்டும்.

இத்தகைய ஆசார்யஸ்தானத்தை நிர்வாஹம் செய்யும் புருஷர்களை திவ்யதேசங்களில் கௌரவித்து வம்சபரம்பரையாக ஸ்தாபிக்க வேண்டும். இல்லையேல் ஸகல சாஸ்திர தரும வரம்புகளும் அழிந்து போய்விடும்.

ஆகையினால்தான் சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட தருமநியமங்களை நிலைநிறுத்துவதற்காக, கல்வி குலம் முதலியவற்றால் கௌரவிக்கத்தக்கவர்களும் பிரமஞானம் படைத்தவரில் தலைவர்களும் சாஸ்திரப்பொருள்களைப் போதிப்பதில் ஊக்கமுடையவர்களுமான ஆசார்ய புருஷர்கள் எழுபத்துநால்வர் எல்லாவிடங்களிலும் நம்மால் ஸ்தாபிக்கப்பட்டு ஆசார்யஸ்தானத்தை நிர்வஹித்து வருகின்றனர்:

(தொடரும்)

## நில உலகில் இல்லா திருப்பதிகள்

ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய திருப்பதிகள் மொத்தம் 108; இதில் நில உலகில் காண முடியாத திருப்பதிகள் இரண்டு.

ஒன்று திருப்பாற்கடல் (வ்யூஹம்), 106 திவ்ய திருப்பதிகளை சேவித்தவர்கள் அவர்களின் பரமபதித்தபின், பகவானே இந்தத் திவ்ய தேசத்திற்கு அழைத்துச் சென்று சேவை சாதிக்கின்றார் என்பது பெரியோர்கள் நம்பிக்கை. இங்கு இந்த ப்ராக்ருத சரீரத்துடன் போக முடியாது. ஸூக்ஷ்ம சரீரம் பெற்ற பிறகே இங்குச் செல்லலாம்.

மற்றொன்று திருப்பரமபதம் (ஸ்ரீ வைகுண்டம், திருநாடு, பரம் என்று அழைக்கப்படுவது). இதுவும் பூலோகத்தில் இல்லை. இது வைஷ்ணவர்களின் லக்ஷ்யமான மோக்ஷ நிலையாகும். எம்பெருமானின் பரத்வம் விளங்குமிடம். இங்கு ஜீவாத்மாக்கள் பகவானைப் போலவே ஸ்வரூபம் பெற்று, ஆனால் அவனுடன் இரண்டறக்கலவாமல் அவனுக்குக் கைங்கர்யம் செய்வார்கள்.

106 திவ்ய திருப்பதிகளையும் சேவித்த பக்தர்களை அவர்கள் பரம பதித்த பின், பகவானே இந்த திவ்ய தேசத்தை அவர்களுடைய நிரந்தர வாஸஸ்தலமாக்கி மகிழ்விப்பான் என்பது பெரியோர்கள் வாக்கு.

தகவல்: கமலவேணி தனபதி.

# ஸ்ரீ கிருஷ்ண கர்ணம்ருதம்-முரளி விடு தூது

கர்ண அம்ருதம் என்ற வடமொழிச் சொல்லுக்கு 'செவிக்கு இனிய அமுதம்' எனத் தீந்தமிழில் பொருள் கொள்ளலாம். பாபகர்மாவில் ஆழ்ந்திருந்த 'லீலாசுகர்' என்ற பில்வ மங்களர் இயற்றிய வடமொழி ஸ்லோகம் 'ஸ்ரீ க்ருஷ்ண கர்ணம்ருதம்' என்று அழைக்கப்படுகிறது. இது கண்ணபிரானைப் பற்றிக் கூறும் ஓர் பக்தி ரச காவியமாகும்.

பில்வ மங்களர் என்ற லீலாசுகர், சிந்தாமணி என்ற வேசிப் பெண்ணொருத்தியிடம் தணியாத அன்பு பூண்டிருந்தார். அவர் விஷய ஆசைகளிலே சிக்கி, இந்திரியங்களுக்கு அடிமையாகி, சிந்தாமணியைத் தவிர வேறொன்றிலும் ஆசையற்றவராய் நின்றவேளையில், அப்பெண்மணியானவள் அவரைத் திருத்திப்பணி கொள்ளக் கருதி மெய்ஞ்ஞான வழியைப் புகட்டினாள். லீலாசுகரும் தன் தவற்றை உணர்ந்து கிருஷ்ண பக்தியில் திளைத்து, பாப இருளைப் போக்கிக் கொண்டு ஞான ஒளி வீசப் பெற்றவரானார். கிருஷ்ண பக்தியில் ஆழங்கால்பட்டு கிருஷ்ணனின் திருமுக சௌந்தர்ய அழகில் மயங்கி அனைவரும் வியக்கும் வண்ணம் ஸ்ரீ க்ருஷ்ணப்ரேமியாகி ஸ்ரீ க்ருஷ்ண கர்ணம்ருதம் எனும் அற்புதமான காவியத்தை இயற்றினார்.

இம்மானுட வாழ்வில் பலவிதமான உணர்வுகளுக்கு நாம் அடிமையாகி விடுகின்றோம். வாழ்க்கையில் காமம் என்ற உணர்வும் சகஜமானதுதான். எனினும் அத்தாழ்ந்த உணர்வையே இறைவனின் திருப்பாத கமலங்களில் ஸமர்ப்பித்து ஒன்றறக் கலக்கும் பேற்றை அடையும்போது அக்காமமே மகத்துவம் பெற்று பரிபூரண பக்தி மார்க்கமாகிறது. பரிசுத்தமான வெள்ளை உள்ளத்துடன் இறைவனை நாம் அடையும்போது நாமும் குழந்தையாக ஆகிவிடுகிறோம்.

பெண் மோகத்தில் திளைத்த லீலாசுகர், கண்ணபிரானின் அருள்விலாஸத்தினால் பக்தி ஞானம் அடைந்த போது இத்தகைய தாழ்ந்த மோகத்துக்குக் காரணமாக இருந்த தன் ஊனக் கண்களை முள்ளால் குத்திக் கொண்டார். ஞான மார்க்கத்தை கைக்கொள்ளத் தொடங்கிய லீலாசுகருக்கு எம்பெருமான் கண்ணபிரான் தன் அருள் ஒளியை வீசி அற்புதங்கள் நிகழச் செய்தான். நன்மை வந்தெய்துவதும் அவனருளாலே, அருள் சுரப்பதும் அவனருளாலேயன்றோ? ஸ்ரீ கிருஷ்ணனின் அற்புதமான லீலாவைபவங்களைப் பாடி, 'லீலாசுகர்' என்ற சிறப்புப் பெயரையும் பெற்று பக்தி சிரோன்மணியாக விளங்கினார்.

கண்ணனின் திவ்ய மங்கள ரூபத்தைக் கண்டுகளிக்கக் கருதி மனக் கடலின் திருக்கதவங்களை விசாலமாகத் திறக்கின்றார். கருணை கடாக்ஷத்தை உடையவன்தானே கண்ணன். கூப்பிட்ட குரலுக்கு ஓடி வந்துவிட்டான். மயிற் பீலியினால் அலங்கரிக்கப்பட்ட அவன் முடியழகைக் காண்கின்றார். யௌவனத்தின் வாயிற்படியிலே நிற்கின்ற அவனுடைய மாதுர்யம் நிரம்பிய திருமுகத்தைக் காண்கின்றார். அவனுடைய தேஜோ மயமான சுந்தர ரூபத்திலே மயங்கிச் சுற்றிலும் புடைசூழ நிற்கும் கோபஸ்திரிகளைக் காண்கின்றார்.

மாயக் கள்வனல்லவா கண்ணன். லீலாசுகர் கண்ட கண்ணனின் வடிவழகுக் காட்சிகள் க்ஷண நேரந்தான். வந்த சுவடு தெரியாமல் மறைந்து விட்டான் கண்ணன். கண்ணனைக் காணாத லீலாசுகர் தடுமாறுகின்றார், ஏங்குகிறார். எங்ஙனம் மீண்டும் கண்ணனைக் காண்பது எனத் தவிக்கின்றார். அப்போதுதான் அவருக்கு ஒரு எண்ணம் உதயமாயிற்று.

லீலாசுகர், கண்ணனிடம் மீண்டும் தன்னைச் சேர்த்து வைக்க உதவக் கூடியது, கண்ணனுடைய உதட்டிலே அமர்ந்து இணைபிரியாமல் அவனுடன் உறவாடிக் கொண்டிருக்கின்ற முரளியே எனத்துணிந்து அதனிடம் உதவி கேட்கிறார்.

'ஓ! முரளி! நீ மிகுந்த பாக்கியசாலி! முகுந்தனுடைய அழகான முகாரவிந்தத்தில் பொருந்தி, அவனுடைய ரஸமயமான மூச்சுக் காற்றிலே மூழ்கி அதன் ருசியைப் பருகிக் கொண்டு ஆனந்தமாக இருக்கின்றாயே! உன் பிறவி மிக்க புண்ணியமானது. உன்னை வணங்கி ஒன்று யாசிக்கின்றேன். நீதான் மோகனனின் உதட்டிலேயே அமர்ந்து காது வரையில் நீண்டு நிற்கின்றாயே அவன் கீதம் இசைக்கும்போது சந்தோஷமாக இருப்பான். அச்சமயம் பார்த்து மெள்ள ரகசியமாக அவனுடைய செவியிலே என்னுடைய பரிதாபகரமான நிலையைச் சொல்லுகின்றாயா? நந்தகுமாரனான அவனிடம் எனக்காக சிபாரிசு செய்கிறாயா?' என்று உருகி வேண்டுகின்றார்.

லீலாசுகரின் பிரார்த்தனையும் பலிக்கிறது. கருணாமூர்த்தியான கண்ணன் மீண்டும் ப்ரத்யக்ஷமாகின்றான். லீலாசுகர் மெய் சிலிர்ந்து புளகாங்கிதம் அடைகின்றார். அநாதரக்ஷகனான அவனது திருவடி நிலைகளில் விழுந்து வணங்குகிறார்.

லீலாசுகரின் திருவாக்கிலிருந்து 'ஸ்ரீ கிருஷ்ண கர்ணம்ருதம்' வெளிவரத் தொடங்குகிறது. அதில் கண்ணனின் அருள் சுரக்கும் மைபடர்ந்த தாமரைக் கண்களைக் கண்டு பரவசமடைந்து பாடுகின்றார். மதுரமான அகண்ட முகவிலாஸம், மற்றும் நீலமேக ஸ்யாமளனின் வேணுகான இசை பற்றியும், ராஸக்ரீடை பற்றியும் பரக்கப் பாடுகின்றார்.

பல்லாண்டு காலம் இந்தக் கர்ணம்ருதம் கிருஷ்ணனின் செவிகளில் இனிமையை ஊட்டிக் கொண்டிருக்கட்டும், நமக்கும் அவனருள் சுரக்கட்டும் என்று தலைக்கட்டுகின்றார்.

இவ்வாறு தவசிரேஷ்டரான ஸ்ரீ லீலாசுகர் பக்திச் சுவை பொங்கப் பாடிய இனிய ரஸமயமான கர்ணம்ருதப் பாடல்களை நாமும் அனுதினமும் பாடி அவனருளைப் பரிபூரணமாகப் பெற்றுப் பயனடைவோமாக.

卐

**திரு. T. T. திருமலை,**
**ஹைதராபாத்.**

# பகவான் வேத வியாஸர்



பகவான் வேத வியாஸர், பண்டைக்காலத்து ரிஷிகளில் மிகவும் உன்னதமானவர் என்று போற்றப் படுகிறார். இவர் ஆச்ரமம் பத்ரியில் இருந்ததால் இவர் பாதராயணர் என்றும் அழைக்கப்படுவார். வேதங்களை எல்லாம் பரிசீலித்து அவைகளை நான்கு பாகங்களாகப் பிரித்து தன் சிஷ்யர்களுக்கு உபதேசித்து அவர்களால் உலக மக்களுக்கு அழியாப் பொக்கிஷமாக இயங்கும்படி வியாஸர் நிறுவினார். மேலும் ஐந்தாம் வேதமென்று போற்றப்படும் மகாபாரதம் இயற்றினவரும் இவரே.

மற்றும் சில கிரந்தங்கள் எல்லாம் எழுதியும் அத்துடன் போதிய திருப்தி அடையாமல் சற்று மன அமைதியற்று யோசனையில் ஆழ்ந்திருந்தார். ஒரு சமயம் நாரதர் அவரைப் பார்க்க வந்த தருணம் வியாஸருடைய மனோநிலையை அறிந்து கொண்டு ஒரு உபாயம் சொன்னார். அதாவது அன்பே உருவாகிய பகவான் கிருஷ்ணனுடைய லீலா விநோதங்களையும், அவர் பக்தர்களுக்குச் செய்த நன்மைகளையும், மற்றும் மோக்ஷத்திற்கு உபாயமான உயரிய உண்மைகளையும் உலக மக்கள் அறிந்து நற்கதியடையும்படி, நூல் ஒன்றை தயாரிக்கும் படி நாரதர் ஒரு யோசனை கூறினார் அதன்படியே வியாஸரும் தேன்மாரி பொழியும் ரஸமுள்ள பாகவதத்தை இயற்றி உலகுக்கு அழியாப் பொக்கிஷமாக அளித்தார்.

வியாஸர் பாண்டவர், கௌரவர் குடும்பங்களுக்கு முதல் தலைவர் ஆனதால் அவர்களுக்கு அடிக்கடி பல நீதி மொழிகளைச் சொல்லி நல்வழிகாட்டி வந்தார். அவர் பாரத சரித்திரத்தில் வரும் விஷயங்கள் முழுவதும் நேரில் கண்கூடாகப் பார்த்தவர், யுத்தம் தொடங்குவதற்கு முன் அதைத் தடுப்பதற்கு அவர் எவ்வளவோ பிரயாசைப்பட்டும் பலனளிக்கவில்லை. காரணம், கௌரவர்கள் அவ்வளவு கொடியவர்களாகயிருந்ததுதான்.

யுத்தத்தில், தருமர் துரியோதனுடைய கோரச் செயல்களை சகிக்காமல் அவனைக் கொல்ல ஆயத்தமானார். ஆனால் வியாஸர் திடீரென்று தோன்றி-அது பீமனுடைய காரியம், கொல்லவேண்டாம் என்று எச்சரித்தார் பிறகு துரியோதனன் பீமனால்தான் வதம் செய்யப்பட்டான் யுத்த காலத்தில் அடிக்கடி பாண்டவர்களை சந்தித்து தைரியம் சொல்லி தர்மயுத்தத்தை தயக்கமில்லாமல் தொடர்ந்து நடத்துவதற்கு உற்சாகமளித்து வந்தார்.

தர்மமே உருவாய் வந்த தர்ம புத்திரர் ஜயமடைந்து ராஜ்ய பாரம் செய்து வந்தாலும் உற்றார் உறவினரை அழித்து விட்டு ராஜபதவி எதற்கு என்று ஏங்கி மன அமைதியற்றுக் கலங்கியிருந்தார். அப்பொழுதும் வியாஸர் விரைந்து வந்து அவருக்கு பல நீதிகளைச் சொல்லி, காட்டுக்குச் சென்று துறவியாக வேண்டாம் என்று தடுத்துத் தேற்றினார்.

அதர்மம் அழிந்தது. அதற்கு தருமர் காரணமில்லை. கிருஷ்ணபரமாத்மாவையும் கௌரவர்கள் அவமதித்தார்கள் அதனால் நாசமடைந்தார்கள். பாண்டவர்கள் நிமித்த மாத்திரம்தான் வதம் செய்தார்களே ஒழிய கௌரவர்கள் கிருஷ்ண பகவானால் முந்தியே கொல்லப்பட்டவர்கள்தான் என்று பலவாறு சமாதானம் சொல்லவே தருமர் நீடித்து சிலகாலம் ஆட்சி புரிந்து வந்தார். திரௌபதிக்கும் உபதேசம் செய்து தேற்றினார்.

என். என். ராஜன் - திருவண்ணாமலை.

திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும், புத்திரசோகத்தினால் அளவற்ற துயரத்தில் ஆழ்ந்திருக்கும்பொழுது. தகுந்த சமாதானமும் நீதிமொழிகளும் வழங்கி சாந்தி அடையச் செய்தார். கிருஷ்ண பகவானுக்கும் துரோகம் செய்ததால் அவரால் புத்திரர்கள் கொல்லப்பட்டார்கள் பாண்டவர்கள் நிமித்த மாத்திரம் தான் யுத்தம் செய்தார்கள். அவர்களை விரோத பாவனை கொள்ளாமல் உங்கள் புத்திரர் போல் பாவிக்க வேண்டும் என்றும் புத்திமதிகள் உரைத்தார்.

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा
शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम्
मयैवैते निहता : पूर्वमेव
निमित्तमात्रं भव सव्यसाचिन् ।

(ப. கீதை 11-33)

" ஆகையால் நீ எழுந்திருப்பாயாக. புகழை அடைவாய். பகைவர்களை ஜயித்து. செல்வம் நிறைந்த

ராஜ்யத்தை அனுபவி. என்னுலேயே முன்பே இவர்கள் கொல்லப் பட்டனர். இடது கையாலும் அம்பு தொடுக்கும் வீரனே! நீ நிமித்தமாத் திரமாக இருப்பாய்.''

திருதராஷ்டிரனும் காந்தாரியும் சோகம் தணிவதற்காக இறந்த புத்திரர்களை ஒருதரம் பார்ப்பதற்கு உதவ வேண்டுமென்று வியாஸரிடம் முறையிட்டார்கள். வியாஸர் தன்னுடைய தபோ சக்தியினுல் ஒருநதிக் கரையில் ஓர் இரவில் அவர்களை அமரச் சொல்லி வானுலகு சென்ற புத்திரர்களையும் பந்துக்களையும் அழைத்து சில நேரம் கூடியிருக்கச் செய்தார். பிறகு அவர்கள் திரும்பி வானுலகம் சென்றனர். திருதராஷ்டிர தம்பதிகள் சற்று சாந்தி அடைந்தனர். பாண்டவர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

ஆதிசங்கரர் தன்னுடைய 14-ம் வயதில் பத்ரிகாச்ரமத்தில் பத்மபாதர் முதலான சிஷ்யர்களுக்கு வியாஸ பகவானுல் தொகுக்கப்பட்ட ப்ரம்ம ஸூத்ரத்திற்கு தான் செய்த பாஷ்யத்தை உபதேசித்து வந்தார். அச்சமயம் வியாஸர் சங்கரரை சோதிக்க எண்ணி தன்னுடைய ஸ்வய ரூபத்தை மறைத்து ஒரு சாதாரண முனிவரைப் போல் வந்து, சங்கரரிடம் காரணமில்லாமல் கோப பாவனையுடன் ''வியாஸருடைய உன்னத யோக்யதாம்சத்திற்கும் சங்கரருடைய சாமான்ய அறிவுக்கும் எப்படி ஒப்பிட முடியும். சங்கரருக்கு என்ன தெரியும் உயரிய வினுக்களுக்கு சரியான அளிக்க தகுதி உண்டா?'' என்று படாடோபமாக கர்ஜித்தார். அதற்கு சங்கரர் மிகவும் சாந்தமாய் தாழ்மையுடன் கேள்வி கேட்டால் தன் சிற்றறிவுக்கு எட்டியவரையில் பதிலளிக்க முயற்சிக்கிறேன் என்று உரைததார்.

பிறகு வியாஸர் அதிநுட்பமான வேதாந்த விஷயங்களடங்கிய வினுக்களை சரமாரியாகப் பொழிந்தார். அதற்கு சங்கரர் சபையில் இருப்பவர்கள் ஆச்சரியப்படும் வகையில், தாமதமில்லாமல் உடனுக்கு உடனே உன்னத தத்துவங்கள் அடங்கிய உரைகளை அளித்து அமைதியுடன் வீற்றிருந்தார். வியாஸர் உடனே தன்னுடைய சோதனை மிகவும் வெற்றிகரமாக முடிந்ததைப் பற்றி மகிழ்ச்சியடைந்து தன்னுடைய ஸ்வய ரூபத்தை வெளிக்காட்டினர் சங்கரரும் சந்தோஷமடைந்து வணக்கங்கள் செய்தார்.

சங்கரருக்கு முதலில் ஆயுள் எட்டு வருஷம் தான் என்று விதிக்கப்பட்டிருந்தது. சப்த ரிஷிகள் வந்து ஆசீர்வதித்து 16 வயதாக அது உயர்த்தப் பட்டது. மறுபடியும் இத்தருணத்தில் வியாஸர் இன்னும் 16 வயது கூட்டி மொத்தம் 32 ஆக உயர்த்தி ஆசீர்வதித்தார் மேலும் வியாஸர் சங்கரருக்கு. 72 துர்மதங்களையும் கண்டனம்செய்து அத்வைத சித்தாந்தத்தை அசைக்கமுடியாத வகையில் உலகத்தில் ஸ்தாபிதம் செய்யும்படி ஆஞ்ஞாபித்து மறைந்து விட்டார். சங்கரரும் அத்வைத சித்தாந்தத்தை நன்முக ஸ்தாபிதம்செய்து வேருன்றி விடும் வகையில் செயலாற்றினர்.

துவாபார யுகம் முடியும் தருணத்தில் கிருஷ்ண பகவான் பூதவுடலை நீத்து வைகுண்டம் செல்ல ஆயத்தமானர். அச்சமயம் அர்ஜுனன் அளவிலா துக்கததிலாழ்ந்தான். வியாஸர் வந்து அவனுக்கு சமாதானங்கள் சொல்லி கிருஷ்ணன் அவதரித்த காரியம் முடிந்தது அவர் இருப்பிடம் செல்கிருர் என்று விவரித்து அவதார மகிமையை நினைவூட்டினர்.

இப்படி சோகப்பட்டவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அநேக நன்மைகளைச் செய்து லோகாபகாரமாகவே காலம் முழுவதும் கழித்து வந்தார் வியாஸர்.

வியாஸர் மஹாபாரதக் கதையில் வரும் விஷயங்கள் சகலமும் கண்கூடாக நேரே பார்த்திருந்தவர். அதனுல் பிரும்மா ஒரு நாள் அவரிடம் வந்து பாரத சரித்திரத்தை உலக மக்களுக்கு அளிக்கும் ரீதியில் அவரே எழுத வேண்டும் என்று சொன்னுர். மேலும் எழுதுவதற்கு உதவியாக சிவகுமாரனுகிய கணேசரையே வியாஸரிடம் அனுப்பினுர்.

கதை தொடங்கி கணேசர் எழுத ஆரம்பிக்குமுன் ஒரு நிமிஷம் கூட நிறுத்தாமல் வசனம் சொல்லிக் கொண்டே போக வேண்டும், நிறுத்தினுல் நானும் நிறுத்தி விட்டுப் போய்விடுவேன் என்று அழுத்தமாகச் சொன்னுர். அதற்கு வியாஸரும் சம்மதித்து தானும் ஒரு விதியைச் சொன்னுர்—அதாவது தான் சொல்லும் வாக்கியங்களெல்லாம் அர்த்தம் நன்ருய் தெரிந்துகொண்டு பிறகு தான் கணேசர் எழுத வேண்டுமென்று அதன்படியே இருவரும் சம்மதிக்க, கதை வெகு விமரிசையாக ஓடிக்கொண்டிருந்தது. வியாஸரும் முக்கியமான இடங்களில் கணேசர் யோசிக்க சாவகாசம் ஏற்படும்படியாக கடினமான வாக்கியங்கள் கொடுத்து தானும் சாமர்த்தியமாக இடைவெளி எடுத்துக் கொண்டு இயங்கினுர். கதை நல்லவிதமாக முடிவுற்றது. கடினமான வாக்கியங்கள் வரும் பாகங்களுக்கு ''வியாஸ ரஹஸ்யம்'' என்றும் சொல்வார்கள்.

சரித்திரம் எழுதிய காலம் முழுவதும் வியாஸருடைய சிஷ்யர் வைசம்பாயனர் என்பவர் நன்ருகக் கவனித்து நுட்பமாய் சகலமும் அறிந்து கொண்டார்.

ஜனமேஜய அரசன் ஹஸ்தினுவதியை ஆண்ட காலம் ஒரு யாகம் செய்து வியாஸ பகவானை உபசரித்து பிறகு பாரத சரித்திரத்தை சொல்லும் படி கோரினன். இந்த அரசன் பாண்டவ அர்ஜுனன் வம்சத்தில் வந்தவன். வியாஸர் தன் சிஷ்யன் வைசம்பாயனரை அழைத்து கதையை அரசனுக்கு சொல்லும்படி கட்டளையிட்டார்.

48-ம் பக்கம் பார்க்க.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

**அத்தியாயம்—16.**

**பகுதி—7.**

*சத்தியம், தர்மம், இறைவன் இம்மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவர்கள். உலக நடைமுறை, இம்மூன்றின் அடிப்படையில் அமைந்தது என்பது ஆஸ்திகவாதிகளது கருத்து. மாறாக, நாஸ்திக வாதிகள் இந்த மூன்றையும் மறுக்கின்றனர். நேரிடை—எதிரிடை ஆகியவற்றின் கவர்ச்சி போன்ற சில அடிப்படை இயற்கை நியதிகளுக்குட்பட்டே இந்த இயற்கை இயங்குகிறது. போதுமான அளவு புலன் இன்பத்தை அனுபவிப்பதுதான் வாழ்வின் குறிக்கோள் என்பதுதான் அவர்களது கொள்கை. இத்தகைய கொள்கை எத்தகைய வாழ்க்கையாகப் பரிணமிக்கிறது என்பதற்கான விடை அடுத்த சுலோகத்தில் வருகிறது.*

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய
நஷ்டாத்மாநோऽல்பபுத்தய : |
ப்ரபவந்த்யுக்ரகர்மாண :
க்ஷயாய ஜகதோऽஹிதா : || (16-9)

*"இத்தகைய கொள்கையுடைய அறிவிலிகள் ஆத்ம நஷ்டமடைந்தவர்களாய், கொடும் செயல் புரிபவர்களாய் உலகின் எதிரிகளாய் அதன் அழிவுக்கென்றே தோன்றியிருக்கின்றனர்."*

*நஷ்டத்தில் பெரிய நஷ்டம் எது? ஆத்ம நஷ்டம் அல்லது தன்னை இழத்தல்.*

*லாபத்தில் உயர்ந்த லாபம் எது? தன்னை அடைதல் அல்லது தன்னை உணர்தல்.*

*தன் நம்பிக்கை கொண்டு விளங்குவதும் கடவுள் நம்பிக்கை கொண்டு விளங்குவதும் ஒன்றுதான்.*

*மலத்திலே உழலும் புழு அதையே சொர்க்கமாகக் கருதுவது போல, புலனின்பங்களில் உழலும் நிரீச்வர வாதிகள் புலனின்பத்தையே பெறற்கரிய பேறாகக் கருதி அதனினும் மேம்பட்டது எதுவுமில்லை என்று முடிவு கட்டி உண்மையான பேரின்பத்தை முழுக்கஇழந்தவர்கள் ஆகின்றனர்.*

*எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் புலன் நுகர்ச்சிக்கு அடிமையாகின்றானோ அந்த அளவு அவன் புல்லறிவாளன் ஆகின்றான். புலன்களின் இயல்பு ஒருவனை ஏமாற்றிப் பரிதவிக்கவிடுவதேயாகும். புலனின்பம் அளவு கடந்து போகின்ற பொழுது அது ஒருவனது அழிவிற்கு வித்தாகிறது இத்தகைய அக்ஞானிகள் எத்தகைய கொடும் செயல்கள் செய்யவும் தயாராயிருப்பர். குடிகாரன் என்னதான் உயர்ந்த தத்துவம் பேசினாலும் குடிக்கிற வேளை வந்துவிட்டால் அவன் குடியின்பத்தை அடைவதற்காக எத்தகைய பாபத்தையும் செய்யத் தயாராகஇருப்பான். புலன்களின் ஆற்றல் அத்தகையது. சதுர்வேத பண்டிதனான ராவணன் மதி மயங்கியதால்தானே சீதையை அபகரித்து அதன் மூலம் தனது அழிவைத் தானே தேடிக் கொண்டான். அவனைப் பொறுத்தமட்டில் மறம் அறமாகவும், பொய் உண்மையாகவும் மாறி அமைந்தது. அவையோர் சொல்லிய புத்திமதி எதுவும் அவன் செவிகளில் விழவில்லை. நல்லது கூறியவர்கள் அவனுக்கு எதிரிகளாகத் தென்பட்டனர். ராவணன் புரிந்த கொடும் செயல்கள்தான் எத்தனை எத்தனை! அவனிடம் சிக்குண்டு அவதிப்பட்டவர் எத்தனைப் பேர்! ராவணனது செயலால் யார் யாரெல்லாமோ துன்பத்திற்கு உள்ளானார்கள். ராவணனைப் போன்ற அரக்க குணம் படைத்தவர்கள் உலகின் எதிரிகளாகின்றனர்.*

*இன்று உலகில் நம்மைச் சுற்றி நிகழும் கொலை, கொள்ளை மற்றும் வன்முறைகளைப் பார்க்கும் பொழுது அரக்க குணம் மிக்கவர்கள் மனித சமுதாயத்தில் அதிகரித்து விட்டார்கள் எனத் தீர்மானிக்கத் தோன்றுகிறது. சிறுசிறு காரியங்களுக்காகப் பெரும் பெரும் பாபங்கள் சர்வ சாதாரணமாகச் செயல்படுகின்றன. பொன்னையும், பெண்ணையும் அடைவதற்காக எத்தகைய கொடூரமான செயல்கள் அன்றாடம் நம்மைச் சுற்றி நிகழ்கின்றன என்பதற்கு இன்றையப் பத்திரிகைகள் நல்ல சான்று ஆகும். இத்தகையோர், அவர்களிடம் மனம் என்ற ஒன்று இல்லையோ என்று மற்றவர் நினைக்குமளவுக்குப் பெருந்தீச்செயல்களையும் சர்வசாதாரணமாகச் செய்வர்.*

*அசுர இயல்புடைய இத்தகையவர்களது தீய செயல்கள் என்னென்ன வடிவெடுக்கும் என்பதற்கு பகவான் கீழ்க்காணும் சுலோகத்தில் விளக்கம் தருகிறார் :*

காமமாச்ரித்ய துஷ்பூரம்
தம்பமானமதான்விதா :
மோஹாத் க்ருஹீத்வாऽஸத்க்ராஹான்
ப்ரவர்தந்தேऽசுசிவ்ரதா : ||(16-10)

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

நிறைவேறாத ஆசையுடையவர்களாய், ஆடம்பரமும் பெருமையும் மதமும் கூடியவர்களாய், மயக்கத்தால் கெட்ட எண்ணங்களைக் கிரஹித்துத் தீயதீர்மானங்களுடன் தொழில் புரிகின்றனர்!

எரியும் தீயைப் பெட்ரோல்ஊற்றி எவ்விதம் ஒருபோதும் அணைக்க முடியாதோ, அதுபோல ஆசைகளை அனுபவித்துத் தீர்க்க முடியாது. அனுபவிக்க அனுபவிக்க நாட்டம் அதிகரிக்கத்தான் செய்யும். ஒரு ஆசையை அனுபவித்துப் பூர்த்தி செய்வோமேயாகில் அந்த இடத்தில் மற்றொரு ஆசையோ அல்லது வேறு பல ஆசைகளோ முளைத்து நிற்கும். வெட்ட வெட்ட முளைக்கும் ராவணன் தலை போல அனுபவிக்க அனுபவிக்க ஆசைகளும் மீண்டும் மீண்டும் தோன்றிக் கொண்டிருக்கும். 'Desires are insatiable' என்பதுதான் அதாவது ஆசைகள் திருப்திப்படுத்த முடியாதவை என்பதுதான் தத்துவம் வர்த்தக இயல் மற்றும் பொருளாதாரத்தின் அடிப்படைக் கொள்கையாகும்.

உள்ளத்தில் ஒரு ஆசை இருந்து விட்டால் அதைப் பூர்த்தி செய்ய மனம் பல வழிகளைக் கையாளுகிறது. 'By hook or by crook' என்பது போல பொய், களவு, கொலைபோன்ற எதைச் செய்தாவது விரும்பியதை அடைய அரக்ககுணம் மிக்க மனிதன் முயல்கிறான்.

எவரை எப்படி ஏமாற்றித் தான் விரும்பியதைப் பெறலாம் என்பது பற்றியே அவர்களது காலமும் கவனமும் கழிகின்றன. பைத்தியம் பிடித்த குரங்கு மதுவையும் அமிதமாகக் குடித்து எப்படிக் கூத்தாடுமோ அதுபோல ஆசையின் வயப்பட்டவர்கள் வயது ஆக ஆக அதிக அளவில் ஆசைகளுக்கு அடிமைகளாகின்றனர். அவர்களது ஆசைகளுக்கு அவர்களைச் சுற்றியுள்ளோர் பலியாகின்றனர்; தங்கள் சிறிய செயல்களையும் அவர்கள் மிகவும் புகழ்ந்து கொண்டு மற்றவர்களை மிகவும் ஏளனப்படுத்துவர். இத்தகையோர் தங்கள் உடலின் மீது அதிகமான பற்றுதல் கொண்டு விளங்குவர். தலைமுடியைச் சிங்காரிக்க அரைமணி நேரம், முகப்பவுடர் பூச ஒரு மணி நேரம் என்று அரிய நேரத்தை வீணாக்குகின்றனர். அவர்களது காமம் அளவு கடந்தது.

செய்தது தவறு, ஆனால் அது சரியெனப் பிறர்முன் வாதிடுதலுக்குத் 'தம்பம்' என்று பெயர். தனக்கு சிறிது கூட மதிப்பு பிறர் தர தகுதியில்லாதிருந்தும், பிறர் தனக்கு பெரு மதிப்பு அளிக்க வேண்டும் என்று ஒருவன் எதிர்பார்ப்பது 'கர்வம்' அல்லது 'மானம்' எனப்படும். போற்றற்குரிய அருங்குணங்கள் எதுவும் தன்னிடம் இல்லாதிருந்தும் அவை தன்னிடம் இருப்பதாகக் காட்டிக்கொள்வது 'மதம்' எனப்படும்.

இத்தகைய தம்ப, மான, மதம் போன்ற அசுர குணம் உடையவர்கள் தாங்கள் எண்ணியதை அடைய வேண்டி குட்டி தேவதைகளைக் கொடிய முறையில் உபாசனைபண்ணி உடலை வருத்தி கோரதபம் செய்வது உண்டு இத்தகையவர்களது செயல் முறை வாமாசாரம் அல்லது தீய நெறிமுறை எனப்படும். பிற பெண்களை வசியம் செய்ய, பிறர் பொருளையும் உயிரையும் கவர இத்தகையோர் தங்களது தவ வலிமையைப் பயன்படுத்துவதுமுண்டு. ஆனால் இத்தகைய செயல்களால் அவர்கள் தங்கள் அழிவைத் தாங்களே தேடிக் கொள்கின்றனர்

சிந்தாமபரிமேயாம் ச
ப்ரலயாந்தா முபாச்ரிதா: |
காமோப போகபரமா
ஏதாவதிதி நிஸ்சிதா: || (16-11)

'சாகும் வரையில் அளவு கடந்த கவலையை உடையவர்களாக காம நுகர்ச்சியையே அனைத்திலும் மேலானதாகக் கருதி மற்றொன்று மில்லை என்று தீர்மானம் செய்தவர்களாய்'.

ஆசை வயப்படுபவன் திருடிய பொருளை மடியில் வைத்திருப்பவனுக்கு நிகர். திருடிய பொருள் மடியில் இருக்குமேயாகில், 'இதை எவன் எப்பொழுது கண்டு பிடிப்பானோ? எவன் இதை என்னிடமிருந்து திருடிக் கொண்டு போவானோ!' என்ற பயம் நிச்சயம் அவனது மனத்தில் நிலவும். அதுபோல ஆசைக்கு அடிமைப்பட்டவனிடம் அந்த ஆசைக்கு இடையூறு எப்பொழுது எவன் மூலம் உண்டாகுமோ என்ற பயம் எப்பொழுதும் நிலவும்.

அது மட்டுமல்ல, ஆசைகளை அத்தகையோர் அனுபவித்துத் தீர்த்து விடினும் அவர்களது மரணத்துடன் அந்த ஆசைகள் முடிவு பெறுவதாக பிறருக்குத் தென்படுகிறது. ஆனால் உண்மை அதுவல்ல. அவர்கள் மீண்டும் அடுத்த பிறவி எடுக்கையில் அதே ஆசை செயல்படத் தொடங்குகிறது. எனவே அந்த ஆசை பூர்த்தி பண்ண முடியாத ஆசையாகிறது. முள்ளைத் தின்னும் ஒட்டகம் அதன் வாயிலிருந்து ரத்தம் பெருகினாலும் அது முள்ளைத் தின்பதை நிறுத்துவதில்லை. அதுபோல உலகாயத மனிதன் ஏற்கெனவே பெற்ற குழந்தைகளைக் காப்பாற்றமுடியாது தவிக்கும் நிலையிலும் மேலும் மேலும் குழந்தைகளைப் பெறுவதை அவர்கள் நிறுத்துவதில்லை. ஏற்கெனவே வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில், டம்பத்திற்கு இரையாகி வீண் செலவுகளைப் பெருக்கிக் கொண்டு மேலும் மேலும் கடன் வாங்கிப் பெருத்த கடனாளிகளாகிறார்கள்.

இத்தகைய மக்கள் தாங்கள் படும் கஷ்டம் போதாதென்று ஆத்ம நாட்டம் உள்ள மற்றவர்களையும் கேலி கிண்டல் செய்து தங்கள் கீழ் நிலைக்கு அவர்களையும் இழுக்க முயல்கின்றனர்.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# அன்னமாச்சார்யா இசை விழா-1985

**5-5-85 முதல்** **9-5-85 வரை**



ஸ்ரீ அன்னமாச்சார்யா

துவக்கவிழா மேடையில் முக்கியப் பிரமுகர்கள்





திரு ஜி. முத்துகிருஷ்ணமநாயுடு



திரு. ஏ. வேங்கடேஸ்வரலு



திரு. வி. கே. டி. வி. எஸ். ராஜு



திரு. எம். பாலமுரளி கிருஷ்ணா



திரு. பொ. வேங்கடேஸ்வரராவ்



திரு. பி. வேங்கடேஸ்வரலு



திரு. பாப்பு



திரு. பு. நாராயணசார்யலு



திரு. நரசிங்நாயக்

துவக்கநாள் விழாவின்போது முக்கிய பிரமுகர்கள் தி. தி. தேவஸ்தானத்தாரால் கௌரவிக்கப்பட்டனர்.





திரு. புட்டபர்த்தி நாராயணாசார்யலு பேசுகையில்

திருப்பதியில், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆதரவில், ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்ட அமைப்பின் மேற்பார்வையில், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் தீவிர பக்தரும், தெலுங்கு பக்தி இசைக் கவிதையின் தந்தையுமான கி. பி. 15-ம் நூற்றாண்டைச் சார்ந்த ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாரின் 577-வது பிறந்த நாள் விழா 5-5-85 முதல் 9-5-85 வரை ஐந்து நாட்கள் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. முதல் நாள் காலை அன்று ஸ்ரீ அன்னமாச்சார்யா உள்ளிட்ட பல்வேறு இசைப் பக்தர்களின் வண்ணத் திருவுருவப் படங்கள் அலங்கரிக்கப்பட்ட ஊர்தி ஒன்று திருப்பதி நகர முக்கிய வீதிகளில் ஊர்வலமாகச் சென்றது. இதுபோது, திருப்பதி அருகே உள்ள தி. தி. தே. ஸ்ரீநிவாச மங்காபுரக்கோயிலின் உற்சவ மூர்த்திகளின் திருவீதி உலாவும் நடைபெற்றது. தொடர்ந்து ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட விசேஷ பூஜையின்போது, திரு. நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், திருவாளர்கள் எம். பி. என். சேதுராமன், பொன்னுசாமி, ஒங்கோலு ரங்கய்யா ஆகியோரின் நாதஸ்வர இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றன. இதுபோது ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் திருவுருவச்சிலை ஒன்றினை, ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. என். எத்திராஜராவ் அவர்கள் திறந்து வைத்தார். அன்று மாலை தி. தி. தே. நிர்வாகக் கட்டிடத்தை அடுத்துள்ள வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட திறந்த வெளி அரங்கில், இப்பிறந்த நாள் விழாவின் துவக்க விழா இனிதே நடை பெற்றது. மாலை 6 மணி அளவில் வேத பாராயணத்துடன், திரு. டி. பசுபதி, திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் ஆகியோரின் இறை வணக்கப் பாடலுடன் துவங்கிய இவ் விழாவிற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு வி. கே. டி வி. சத்யநாராயண ராஜு எம். எல். ஏ. அவர்கள் தலைமை வகிக்க, விழாவிற்கு வருகை புரிந்தோரை, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயண அவர்கள் வரவேற்றுப் பேசுகையில், அன்னமய்யாவின் பாடல்களின் பெருமையினைப் பாராட்டியதைத் தொடர்ந்து, தேசிய அளவில் இது போன்ற இன்னிசை விழாக்கள் கொண்டாடப்பட வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டுப் பேசினார். தொடர்ந்து அன்னமாச்சார்ய திட்டக்குழு அலுவலர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசலு அவர்கள் ஆண்டறிக்கையினை வாசிக்கையில், ஸ்ரீ அன்னமாச்சார்யா கீர்த்தனைகள் பொறிக்கப் பெற்ற சில செப்பேடுகள் 1922இல் திருமலைக் கோயில் அரங்கினுள் கண்டெடுக்கப்பட்டன என்று குறிப்பிட்டு, 1950-முதற்கொண்டு அப்பாடல்களுக்குப் பண் அமைக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்றும் கூறினார். தொடர்ந்து பேசுகையில், இப்பண் அமைக்கும் பணியில் பெரிதும் பங்கேற்ற மறைந்த அறிஞர்களான திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி, திரு. ராள்ளபள்ளி அனந்தகிருஷ்ண சர்மா ஆகியோரின் முயற்சியினை நினைவு கூர்ந்து, அன்னமய்யா கீர்த்தனைகளின் பெருமையினைப் பரப்பும் வகையில், அவற்றை நூல் வடிவமாகவும், பதிவு நாடா விற்பனை மூலமாகவும் தி. தி. தே. மேற்கொண்டு வரும் திட்டங்களை விரிவாக எடுத்துப் பேசினார். விழாத் தலைவர் திரு. வி. கே. டி. வி. சத்யநாராயண ராஜு அவர்கள் தம் தலைமை உரையில் அன்னமய்யாவின் கவிதைப் புலமையினை விளக்கிப் பேசினார். ஆந்திர பிரபா தெலுங்கு நாளேட்டின் ஆசிரியர் திரு. பொ. வேங்கடேஸ்வர ராவ் அவர்கள் தம் சிறப்புரையில், திருப்பதியில் வானொலி நிலையம் ஒன்றினை அமைக்க வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டுப் பேசினார். பிரபல இன்னிசைப் பாடகர் திரு. எம்.

திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்கள்





திரு. எஸ். ஆர். ஜானகிராமன்

பாலமுரளி கிருஷ்ணா அவர்கள் தம் சிறப்புரையில், பலர் பலவாறு ஒரே கீர்த்தனைக்குப் பண் அமைக்கும் செய்கையினைக் கண்டித்துப் பேசினார். தொடர்ந்து பேசுகையில் வடநாட்டு 'இந்துஸ்தானி' பாடகர்களிடையே அன்னமய்யா பாடல்களைப் பரப்பும் அவசியத்தைக் குறிப்பிட்டார். மேலும் இவ்விழாவில் சிறப்பு விருந்தினராக ஆந்திர மாநில கல்வி அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணம நாயுடு, பிரபல ஓவியர் திரு. பாப்பு, ஆந்திர மாநில சட்ட மன்றத் தலைவர் திரு. நாராயணராவ், பன்மொழி வித்தகர் திரு. புட்டபர்த்தி நாராயணா சார்யலு ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். பின்னர் விழாவிற்குச் சிறப்பு விருந்தினர்களாக பங்கேற்றவர்களுக்கு தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் பொன்னாடைகளைப் போர்த்தி, நினைவு பதக்கங்கள் வழங்கி கௌரவித்தார். இறுதியில் தி. தி. தே. காவல் மற்றும் கண்காணிப்பு அலுவலர் திரு. கே. கிருஷ்ணமூர்த்தி ஐ. பி. எஸ். அவர்கள் நன்றி நவின்றார். அதனைத் தொடர்ந்து, திரு. காமி செட்டி ஸ்ரீநிவாசலு தலைமையில் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டத்தின்கீழ் பணிபுரியும் இசைக்கலைஞர்கள் பங்கேற்ற இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. தொடர்ந்து திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

6-5-85 அன்று காலை திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் திரு. எஸ். ஆர் ஜானகிராமன் தலைமை வகிக்க, 'ஸ்ரீ ராள்ளபள்ளி அனந்தகிருஷ்ண சர்மா அவர்களின் பார்வையில் ஸ்ரீ அன்னமய்யா கீர்த்தனைகள்' எனும் தலைப்பில் திரு. ராள்ளபள்ளி பனிசாயி அவர்கள் இசை - உரை ஒன்றினை நடத்தினர் அன்று மாலை தி. தி. தே. மேலாண்மைக் குழு உறுப்பினர் திரு. எல். நரசிங் நாயக் அவர்கள் அன்றைய விழாவிற்கு தலைமை வகிக்க திருவாளர்கள். பி. பி. ஸ்ரீநிவாஸ், மகாராஜபுரம் சந்தானம் ஆகியோரின் கர்னாடக இன்னிசைக் கச்சேரியும், திரு. அம்ஜத் அலிகான் அவர்களின் ஸரோத் கச்சேரியும் நடைபெற்றன. 7-5-85 அன்று காலை, பிரபல திரைப்பட இயக்குநர் திரு. கே. விஸ்வநாத் அவர்கள் தலைமை வகிக்க, 'அன்னமய்யாவும் மற்றைய தென்னிந்திய இசைப்பாடகர்களும்' எனும் தலைப்பிலும், திரு. எஸ். ஆர். ஜானகிராமன் அவர்கள் "தீக்ஷிதரின் கீர்த்தனைகள்" எனும் தலைப்பிலும் உரை நிகழ்த்தினர். அன்று மாலை விழாவிற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஆர். வேங்கடேஸ்வரலு அவர்கள் தலைமை வகிக்க, ஹைதராபாத் ஸ்ரீபக்த ராமதாஸ் திட்டத்தின்கீழ் பணிபுரியும் ஸ்ரீமதி. சாயாதேவி குழுவினரின்



திரு. பி. பி. ஸ்ரீநிவாஸ்



ஸ்ரீ மகாராஜபுரம் சந்தானம்

இன்னிசைக் கச்சேரியும், மாஸ்டர். யு. ஸ்ரீநிவாஸ் அவர்களின் மாண்டலின் கச்சேரியும், உஸ்தாத் தில்ஷத் சாகேப் மற்றும் திருமதி பர்வீன் சுல்தானா ஆகியோரின் ஜுகல்பந்தி கச்சேரியும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

8-5-85 அன்று காலை திருவனந்தபுரம் இளையராஜா அவர்கள் தலைமை வகிக்க 'க்ஷேத்ரய்ய பாடல்களில் பதங்கள்' மற்றும் 'நாராயண தீர்த்தர் பாடல்களில் தரங்கங்கள்' எனும் தலைப்பில் திரு. பி. ரஜனிகாந்த ராவ் அவர்களும், 'ஸ்ரீ தியாகராஜர் கீர்த்தனைகளில் திவ்ய நாமாக்களும், சம்பிரதாயங்களும்' எனும் தலைப்பில் திரு. எஸ் ராமநாதன் அவர்களும் இசை உரை நிகழ்த்தினர். அன்று மாலை விழாவிற்கு தி.தி.தே. பொறுப்

திரு. அம்ஜத் அலிகான்





திரு. திவாகரல வெங்கடாவதானி

பாண்மைக் குழு உறுப்பினர் திரு. பி. யாதகிரி அவர்கள் தலைமை வகிக்க பேராசிரியர் திரு. எஸ். ராமனுதன் அவர்களின் இன்னிசைக் கச்சேரியும், திரு. சி. சிட்டிபாபு அவர்களின் வீணை இசைக் கச்சேரியும், திருமதி. வாணி ஜெயராம அவர்களின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றன.

9-5-85 அவறு காலை சென்னை மியூசிக் அகாடமி தலைவர். திரு. டி. டி. வாசு அவர்கள் தலைமை வகிக்க. ஸ்ரீ சியாமா சாஸ்திரி கீர்த்தனைகள் பற்றி திருமதி. எஸ். வித்யா சங்கர் அவர்களின் இசை உரையும், கர்னுடக இசையினையும், இந்துஸ்தானி இசையினையும் ஒப்பிட்டு திருமதி. சகுந்தலா நரசிம்மன் அவர்களின் இசை உரையும் நடைபெற்றன. அன்று மாலை நடைபெற்ற பிரிவு வாழ்த்துரை விழாவிற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. வி. கே. டி. வி. எஸ். ராஜு அவர்கள் தலைமை வகிக்க தி.தி.தே. செயலாட்சித் தலைவர் விழாவிற்கு வருகை புரிந்தோரை வரவேற்க, விழாவின் சிறப்பு விருந்தினராக ஆந்திர மாநில ஆளுநர் மாண்புமிகு சங்கர் தயாள் சர்மா அவர்கள் பங்கேற்று உரையாற்றுகையில், தேசிய ஒருமைப் பாட்டு உணர்வுக்கு இது போன்ற தேசீய அளவு நடைபெறும் இன்னிசை விழாக்களின் அவசியத்தைக் குறிப்பிட்டு, அன்னமாச்சார் யாவின் கீர்த்தனைகள் வடமொழியில் மொழி பெயர்க்க வேண்டியதன் முக்கியத்துவத்தையும் விளக்கினுர். பின்னர் அன்னமய்யா வடமொழியில் இயற்றிய 150 கீர்த்தனைகளில முதல் தவணையாக வெளியிடப்பட்ட 27 கீர்த்தனைகள் கொண்ட 'நட்சத்ர மாலிகா' எனும் தி. தி. தே. வெளியீடு ஒன்றினை ஆளுநர் அவர்கள் வெளியிட்டார். விழா இனிதே நிறைவேற உறுதுணையாகஇருந்த பல்வேறு துறைகளைச் சார்ந்த தி.தி.தே. அலுவலர்களுக்கும், ஊழியர்களுக்கும் மேலாண்மையின் சார்பில் ஆளுநர் அவர்கள் நினைவு பதக்கங்கள் வழங்கி கௌரவித்தார். இறுதியில் தி. தி. தே. நிதி ஆலோசகர் மற்றும் உரிமைக் கணக்காளர் திரு. டி. என். கிருஷ்ண சுவாமி அவர்கள் நன்றி நவின்றார். பின்னர், திருவாளர்கள் கே. ஜே. யேசுதாஸ், பீம்ஸென் ஜோஷி ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

★

திரு. தில்ஷத் சாதேப் மற்றும் திருமதி. பர்வீன் சுல்தானு





மாஸ்டர். யு. ஸ்ரீநிவாஸ்



திரு. பி. ரஜனிகாந்தராவ்

# இறைவன் முன் இசைக் கலைஞர்கள்

ஏழுமலையேறி வந்து அந்த ஏழுமலையானைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவல், ஏழை முதல் பணக்காரன் வரை, சின்னஞ்சிறு குழந்தைகள் முதல் வயது முதிர்ந்த பெரியவர்கள் வரை அனைவருக்கும் ஏற்படுவது இயற்கை.

உண்மையான பக்தர்களுக்கு ஜாதி, மத பேதமில்லை. அவர்களுக்கு எம்மதமும் சம்மதம்தான். ஒரு மதத்தினைச் சேர்ந்தவர்கள் மற்ற மதக் கடவுள்களையும் வணங்கத் தயங்க மாட்டார்கள்.

ஆனால் இத்தகைய கருத்துக்கள் சமய நூல்களில் இடம் பெற்றிருக்கின்றன, மக்கள் மனதில் இடம் பெற்றிருக்கவில்லை. அதுவும இந்த 20ம் நூற்றாண்டில் இவை கனவில் கூட நடக்கக் கூடிய விஷயங்களில்லையே என்று நீங்கள் நினைப்பீர்களேயானால், அதில் சிறிதும் தவறில்லை.

ஆனால்அண்மையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினர் நடத்திய ஸ்ரீ வேங்கடேஸ்வரா - அன்ன மாச்சார்யா இசை விழாவின்போது இன்றும்கூட உண்மையான பக்தர்கள் இருப்பது மீண்டும் ஒரு முறை நிரூபிக்கப் பட்டது.

ஆம் சில உண்மையான கிறித்துவ, முஸ்லீம் இசைக் கலைஞர்கள் திருமலை தெய்வத்தை தரிசித்து மெய்மறந்து போயினர். இம்மாதம் 5ம் தேதியிலிருந்து 9ம் தேதி வரை தாள்ளப்பாக்க அன்னமாச்சார்யாவின் 577 ஆவது பிறந்த நாள் நிகழ்ச்சிகளை மிகச் சிறப்பாக, வரலாறு காணாத வகையில் கொண்டாடியது தி. தி. தேவஸ்தானம்.

இந்த இசை விழாவில் நம் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து புகழ் பெற்ற இசைக் கலைஞர்கள் கலந்து கொண்டு அன்னமய்யாவிற்கு இசை மாலை சூட்டி மகிழ்ந்தனர். திருப்பதி வாழ் இசைப்பித்தர்களுக்கு இவ்விழா பெருவிழாவாக விளங்கியதில் வியப்பில்லை

சாதாரணமாக தென்னிந்தியாவில் நடக்கும் இது போன்ற இசை விழாக்களில், கர்னாடக இசைக் கலைஞர்கள் மட்டுமே கலந்து கொள்வார்கள்.



திரு. பி சிட்டிபாபு

ஆனால் இம்முறை வழக்கத்திற்கு மாறாக, ஹிந்துஸ்தானி இசைக் கலைஞர்களும் கலந்து கொண்டது மிகவும் புதுமையானதாகவும் மட்டுமின்றி மிகச் சிறப்பாகவும் அமைந்திருந்தது.

இதற்காக தி. தி. தே., எடுத்துக் கொண்ட பெரு முயற்சிகளை, ஒவ்வொரு வருடமும் தொடர்ந்து எடுக்க வேண்டும் என்று ஒவ்வொரு இசைப்பித்தனும் மனமார வேண்டு



திருமதி. வாணிஜெயராம்

கிற அளவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவில் ஸரோத்பண்டித், உஸ்தாத் அம்ஜத் அலிகான் உஸ்தாத் தில்ஷத் ஸாஹேப், பேகம் பர்வீன் சுல்தானா, திரு. பீம்ஸென் ஜோஷி முதலிய வாய்ப்பாட்டுக்கலைஞர்களும் பங்கேற்றனர்.

திரு. எல்லா வேங்கடேஸ்வரராவ்





திரு டி. டி. வாசு

உஸ்தாத் அம்ஜத் அலிகான் டெல்லியிருந்தும், பேகம் பர்வீன் சுல்தானு மற்றும் உஸ்தாத் தில்ஷுத் ஸாஹேப்பும் பம்பாயிலிருந்தும் இவ் விழாவில் கலந்து கொள்வதற்காக என்று பிரத்யேகமாக திருப்பதி வந்திருந்தனர்.

திருமலை அடிவாரம் வரை வந்து விட்டுத் திருமலை சென்று திருமலே சனைத் தரிசிக்காமல் இருக்கவிடு வாளே எம்பெருமான்? இவர்கள் ஹிந்துக்களல்லாத போதும் பெரு மாளைத் தரிசனம் செய்து தங்களை மறந்தனர்.

அவர்களது இந்த தெய்வீக அனுபவத்தை பற்றிக் கூற வேண்டும் என்று கேட்டதும, அவர்கள் பெற்ற பேரின்பத்தை இவ்வையகம் பெற, தமது வாழ்நாளில் மறக்க முடியாத இந்த இறையுணர்வு மிகுந்த அனுபவத்தைப் பற்றிக் கூறினர். அவர்கள் அனுபவத்தைக் கேட்கக் கேட்க என்னுள் ஏற்பட்ட உணர்வுகளையும், எழுந்த எழுச்சிகளையும் 'ஸப்தகிரி' வாசக அன்பர்களுடன் பகிர்ந்து கொள்ளவே இக்கட்டுரை

உஸ்தாத் அம்ஜத் அலிகான் அவர்களது இசை நிகழ்ச்சி 6ஆம் தேதி மாலை நடைபெறவிருந்ததால், அவர் தங்கியிருந்த தி. தி. தே பத்மாவதி வி ஐ.பி தங்கும் விடுதிக்குச் சென்று அவரைச் சந்தித்தேன் ஆனல் அவர் அன்று மாலைதான் திருமலை செல்வதாகவும் மறுநாள் காலை சரியாக 8 மணிக்கு வரவேண்டும் என்று அன்புடன் வேண்டினர்.

அன்று மாலை திரு. பி. பி. ஸ்ரீனிவாஸ், திரு மஹாராஜபுரம் ஸந்தானம் முதலியவர்களது நிகழ்ச்சிகள் முடிந்து இவரது நிகழ்ச்சி ஆரம்பிக்க மணி இரவு பத்துக்கு மேலாகி விட்டது. அப்படியிருந்தும் ஆயிரக் கணக்கான ரசிகர்கள் எழுந்து போகாமல், தொடர்ந்து 12 மணி வரை அமர்ந்திருந்து இவரது நிகழ்ச்சியைக் கேட்டு ரசித்தார்கள். அந்த அளவு அவர்களின் கச்சேரி சிறப்பாக இருந்தது.

மறுநாள் காலை எட்டு மணியளவில் அம்ஜத் அலிகான் அவர்களை சந்தித்து ஸ்வாமி தரிசனம் செய்த அவரது அனுபவத்தைப் பற்றிச்



திருமதி. எஸ். வித்யாசங்கர்

சொல்லும்படி கேட்டேன். என்னுடன் பேச ஆரம்பிப்பதற்கு முன்பு தனது ஸரோத் வாத்தியத்தை தொட்டு வணங்கி விட்டுத்தான் பேச ஆரம்பித்தார்.

''எனது மூதாதையர்கள் ஆப்கானிஸ்தான் நாட்டைச் சேர்ந்தவர்கள். நாங்கள் முஸ்லீம்களில் பட்டான் 'வகுப்பை சேர்ந்தவர்கள். நான் ஒரு உண்மையான முஸ்லீமாக இருப்பதைவிட, உண்மையான மனிதனுக இருப்பதில்தான் அதிகம் பெருமைப்படுகிறேன்'' என்ருர்.

''அண்மையில் நான் கும்பகோணம், தஞ்சாவூர் முதலிய ஊர்களுக்குச் செல்ல நேர்ந்தது: அப்போது நான் நாகூர் ஆண்டவரை மட்டும் தரிசிக்கவில்லை. அருகிலிருந்த வேளாங்கண்ணிக்கும், உப்பிலியப்பன் கோவிலுக்கும் சென்றேன்.'' என்று சொன்னர்.

''எனக்கு ஹிந்து மத நெறிகள் மிகவும் பிடிக்கும். கிறித்துவ மதப் பழக்கங்கள் பல என்னைக் கவர்ந்திருக்கின்றன. எனக்கு ஜாதி மத பேதமில்லை. என்னை மீறிய சக்தி ஒன்று இருப்பதை நான் நம்புகிறேன். அதைச் சிலர் கடவுள் என்று குறிப்பிடுவதில் என்ன தவறு?'' என்று கேட்டார்.

''இத்தகைய மனநிலையை அடைய எனக்குப்பேரருள் புரிந்த கடவுளுக்கு என் நன்றி திருமலைத் தெய்வத்தை நான் தரிசித்த ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருக்கக் கூடாதா என்று என் மனம் இப்போது கூட ஏங்கித் தவிக்கிறது' என்று உணர்ச்சி பொங்கக் கூறிக்கொண்டே போனர்.

இறுதியாக தனக்கு திருப்பதி லட்டு மிகவும் பிடித்திருப்பதாகவும், அவரது மனைவி, 2 குழந்தைகள் முதலியவர்களுக்கும் இது பிடிக்கும் என்றும், ஏறக்குறைய 30 லட்டுகள் வாங்கியிருப்பதாகவும் கூறிச் சிரித்தார்,

ஓர் அஸ்ஸாமிய ஹிந்துப் பெண்ணை மணந்து கொண்டிருக்கும் அம்ஜத் அலிகானை ஒரு உண்மையான முஸ்

திருமதி. சகுந்தலா நரசிம்மன்.





ஆளுநர் அவர்கள் தி. தி. தே. செய லாட்சித்தலைவர் அவர்களைக் கௌரவிக்கும்போது

லிம் என்றோ, ஹிந்து என்றோ குறிப்பிடுவதைவிட, இறையுணர்வுள்ள ஒரு நல்ல ஆத்மா என்று குறிப்பிடுவதே மிகவும் பொருத்தமாயிருக்கும் என்று நினைத்தபடி அவரிடமிருந்து விடை பெற்றேன்.

பத்மாவதி விடுதியை விட்டுக் கீழறங்கிக் கொண்டிருந்த போது வேகமாக வந்து நின்ற காரிலிருந்து பேகம் பர்வீன் சுல்தானாவும், அவரது கணவர் உஸ்தாத் தில்ஷத் ஸாஹேப்பும் வந்திறங்கினார்கள். இவர்களையும் பார்த்துப் பேசிட முடிவு செய்து, ஓர் அரை மணி நேரம் கழித்து, அவர்கள் தங்கியிருந்த அறைக்குச் சென்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு நான் வந்த காரணத்தையும் கூறினேன்.

அவர்களிருவரும் அன்று மாலை தான் திருமலை போக இருப்பதால் மறுநாள் காலை 10 மணிக்கு வரச் சொன்னார்கள். அன்றிரவு இவர்களது கச்சேரிக்குச் சென்றிருந்தேன். பர்வீன் சுல்தானாவிற்கு மிக மிக அருமையான சாரீரம், அற்புதமான குரல் வளம். கணவர் தில்ஷத் ஸாஹேப்புடன் அருமையாக ஒத்துழைத்துப் பாடினார்.

கச்சேரி மிக அருமையாக இருந்தது. ஆனால் ஓரளவிற்கு கர்னாடக இசையை மட்டுமே கேட்டுப் பழகிப் போன என் காதுகள், ஹிந்துஸ்தானி இசையைக் கேட்பது ஒரு புதுமையான அனுபவமாக இருந்தது; இவர்களது இசையை ரசிக்க முடிந்த அளவு என்னால் அனுபவிக்க முடியவில்லை. குறை என் மீதிருக்கும் போது என்ன செய்வது?

மறுநாள் காலை சரியாகப் பத்து மணிக்கு அவர்கள் அறைக் கதவினைத் தட்டினேன். "ஓ... தென்னிந்தியர்கள் எப்போதும் நேரம் தவற மாட்டார்கள்" என்றவாறு கணவன்மனைவி இருவரும் அன்புடன் வரவேற்றனர்.

பர்வீன் சுல்தானா அவர்கள் முஸ்லீம் பெண் என்றாலும் நெற்றியில்



திரு. கே. ஜே. யேசுதாஸ்

அழகான, அகலமான, பெரிய குங்குமப் பொட்டு. கைகளில் கண்ணாடி-தங்க வளையல்களுடன் 'லக்ஷ்மி' கரமாகக் காட்சியளித்தார். அவரும், அவரது கணவரும் எந்தவித பந்தாவும், தயக்கமும் இன்றி மிகவும் சகஜமாகப் பேசினர்.

கணவன் மனைவி, இருவரும் தங்களது திருமலை தரிசன அனுபவங்களைப் பற்றிக் கூறி. என்னைத் திக்குமுக்காட வைத்தனர்.

"நாங்களிருவரும் திருமணத்திற்குப் பிறகு ஒரு முறை திருமலை வந்தோம். இப்போது மீண்டும் ஒரு முறை வர முடிந்ததில் மிகவும் மகிழ்ச்சி. இத்தகைய விழாவினை ஏற்பாடு செய்த தி. தி. தேவஸ்தானத்திற்கு நன்றி சொல்ல கடமைப் பட்டிருக்கிறோம். இன்னும் சொல்லப் போனால் இது போன்று வருடம் நான்கைந்து விழாக்களை நடத்தினால் கூட நாங்கள் வரத் தயார்" என்று சிறு குழந்தைகள் போல ஆர்வத்துடன் சொன்னார்கள்.

"நாங்கள் பம்பாய் போன்ற மிகப் பெரிய நகரங்களில் வாழ்வதால் எங்களுக்கு மதப்பற்று இருக்கிறதே தவிர, மதவெறி நிச்சயமாகக் கிடையாது. பெரிய பெரிய நகரங்களில், ஓரளவு பணக்காரர்களாக இருந்தாலும் கூட, எல்லா மதத்தினரும் ஒரே இடத்தில் தொடர்ந்து சேர்ந்து வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. இதனால் மற்ற மதத்தினர் மீது நமக்கு ஒரு under standing ஏற்படுகிறது." என்றார் ஸாஹேப்.

"மேலும் மதம், இறைவழிபாடு முதலியன தனி மனிதனின் அந்தரங்க உரிமை. இதில் தலையிடுதலோ ஒரு மூன்றாம் மனிதரின் பேச்சிற்கோ, ஏச்சிற்கோ இடமில்லை. ஆரம்பக் காலத்தில் நான் ஹிந்துப் பெண் போல வாழ்வதை என் மதத்தினர் கண்டித்ததை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மேலும் நாம்

திரு. பீம்ஸென் ஜோஷி



இறைவனை வழிபடுவது நம் ஆத்ம திருப்திக்காகத்தானே. அல்லாவை வழிபடும் போது ஏற்படும் திருப்தி, பெருமாள் ஸ்வாமியை வணங்கும் போதும் கிடைக்கிறது. அதனால் ஹிந்து கடவுள்களையும் நான் வழிபடுகிறேன்'' என்று முழங்கினார் பேகம்.

''நம் இசையில் ஏழு ஸ்வரங்கள் உள்ளன. ஹிந்துஸ்தானி இசையானாலும் சரி, கர்னாடக இசையானாலும் சரி இந்த அடிப்படையில் ஒரு வித மாற்றமும் இல்லை ஆனால் இவற்றை வெவ்வேறு விதமாக பாடுவதால்தான் மாற்றம் ஏற்படுகிறது. இரண்டு இசைகளில் எது உயர்ந்தது எது தாழ்ந்தது என்ற கேள்விகள் எழ வேண்டிய அவசியமில்லை நீ என்ன சொல்கிறாய்'' என்று ஸாஹேப் பேகத்தைப் பார்த்து கேட்டார். பேகம் இதை முழுவதும் ஆமோதித்து 'எல்லா தென்னிந்தியர்களுக்கும் கர்னாடக இசை மட்டும்தான் பிடிக்கும் என்றில்லை அதே போல வட இந்தியர்களுக்கு ஹிந்துஸ்தானி இசை மட்டும் தான் பிடிக்க வேண்டுமா என்ன? இரண்டு இசைகளும் ஒன்றுதான். பாடும் விதம்தானே வேறு. அது போலத்தான் கடவுள் வழிபாடும். கடவுள் ஒருவன் தான், ஆனால் அவன் வெவ்வேறு விதங்களில் தோற்றமளிக்கிறார் அவ்வளவு தான்'' என்று மிகப் பெரிய விஷயத்தை எளிமையாக்கிக் கூறினார் பேகம் பர்வீன் சுல்தானா.

''இந்த விஞ்ஞான யுகமான 20ம் நூற்றாண்டில் மனிதன் மதத்தினை காரணமாக்'கொண்டு சண்டை போடுவதைவிட வேறு கேவலமானது ஒன்றுமேயில்லை. மனம் திருப்தியும், சாந்தியும் பெற உதவுவது மதம். ஆனால் தற்சமயம் அதிருப்தியும், கலவரங்களுமே நாட்டில் ஓங்கியிருப்பது கவலைக்குரியது'' என்றனர் இருவரும்.

''நாங்கள் திருமலை சென்ற சமயம் கழுத்தை நெரிக்கும் கூட்டம். காரில் தான் போனோம் என்றாலும் எங்களால் முடியவில்லை. ஆயிரக்கணக்கான பக்தர்கள் தரிசனத்திற்காக, மணிக்கணக்கில் காத்திருக்கும்போது நாங்கள் வெகு விரைவில், அருமையான விசேஷ விஐபி தரிசனம் செய்ய முடிந்தது. ஒரு கணம் எங்கள் கண்கள் முன்னால் சாதாரண ஏழை பக்தர்கள் எங்களை கோபமுடன் பார்ப்பது போலிருந்தது. ஆனால் அதே சமயம் நாங்கள் இத்தகைய அரிய சலுகைகள் பெறக் காரணம் நாங்கள் கலைஞர்கள் என்பதால்தானே. எங்கள் கலை எங்களுக்கு சம்பாதித்துக் கொடுக்கும் பணத்தைவிட இத்தகைய சில அரிய பெரிய சந்தர்பங்களை நினைத்து எங்கள் மெய் சிலிர்த்தது'' என்றனர்.

''ஸன்னதியில், அவ்வளவு கூட்டத்திற்கிடையிலும் எங்களை 3-4 நிமிடங்களுக்கு மேல் நிற்க வைத்து தரிசனம் செய்வித்தனர். ஆனாலும் மனதில் திருப்தி ஏற்படவில்லை. முகத்தைப் பார்த்தால் பாதங்களைப் பார்க்கவில்லையே, பாதங்களைப்பார்த்தால் முகத்தை சரியாகப் பார்க்கவில்லையே என்ற ஏக்கம் ஏற்பட்டது'' என்றார்கள் சிறிது உணர்ச்சி வசப்பட்டு.

''கோவிலைச் சுற்றி கலையழகுள்ள சிலைக்காட்சிகளை கண்ணாடி போட்டு வைத்திருந்தனர். எனக்கு அவற்றைப் பார்க்க வேண்டும் என்றிருந்தது. ஆனால் கச்சேரிக்கு நேரமாகி விடும் என்று அவசரமாக திருப்பதி வந்து விட்டோம். கோவிலுனுள்ளேயுள்ள பிரும்மாண்டமான தங்க விமானத்தை அருகில் பார்த்த போது எனக்கேற்பட்ட பிரமிப்பு நீங்க சிறிது நேரமாயிற்று (என்ன இருந்தாலும் பேகமும் ஒரு பெண் தானே தங்கம்மீது ஆசையிருப்பது இயற்கை தான்) தங்கத்தை ஈடு செய்வது போல விலைமதிப்பற்ற வேலைப்பாடும் என்னைக் கவர்ந்தது'' என்று மிகவும் உற்சாகத்துடன் கூறினார் பேகம்.

''கோவிலை விட்டு வெளியே வந்து கொண்டிருக்கும் போது அங்கு பக்தர்களுக்கு அளிக்கப்பட்டுக் கொண்டிருந்த மிகச் சிறிய லட்டுகளைப் பார்த்தவுடன் எங்களுடன் வந்த தேவஸ்தான சிப்பந்தியிடம் என்ன திருப்பதி லட்டு இவ்வளவு சிறிய



ஸ்ரீ அன்னமய்யா கீர்த்தனைகள் பொறிக்கப்பெற்ற செப்பேடுகளை ரசாயனமுறையில் சுத்தப்படுத்துதல்.

இறைவனை வழிபடுவது நம் ஆத்ம திருப்திக்காகத்தானே. அல்லாவை வழிபடும் போது ஏற்படும் திருப்தி, பெருமாள் ஸ்வாமியை வணங்கும் போதும் கிடைக்கிறது. அதனால் ஹிந்து கடவுள்களையும் நான் வழிபடுகிறேன்'' என்று முழங்கினர் பேகம்.

''நம் இசையில் ஏழு ஸ்வரங்கள் உள்ளன. ஹிந்துஸ்தானி இசையாளுலும் சரி, கர்னாடக இசையாளுலும் சரி இந்த அடிப்படையில் ஒரு வித மாற்றமும் இல்லை ஆனால் இவற்றை வெவ்வேறு விதமாக பாடுவதால்தான் மாற்றம் ஏற்படுகிறது. இரண்டு இசைகளில் எது உயர்ந்தது எது தாழ்ந்தது என்ற கேள்விகள் எழ வேண்டிய அவசியமில்லை நீ என்ன சொல்கிறாய்'' என்று ஸாஹேப் பேகத்தைப் பார்த்து கேட்டார். பேகம் இதை முழுவதும் ஆமோதித்து 'எல்லா தென்னிந்தியர்களுக்கும் கர்னாடக இசை மட்டும்தான் பிடிக்கும் என்றில்லை அதே போல வட இந்தியர்களுக்கு ஹிந்துஸ்தானி இசை மட்டும் தான் பிடிக்க வேண்டுமா என்ன? இரண்டு இசைகளும் ஒன்றுதான். பாடும் விதம்தானே வேறு. அது போலத்தான் கடவுள் வழிபாடும். கடவுள் ஒருவன் தான், ஆனால் அவன் வெவ்வேறு விதங்களில் தோற்றமளிக்கிறார் அவ்வளவு தான்'' என்று மிகப் பெரிய விஷயத்தை எளிமையாக்கிக் கூறினர் பேகம் பர்வீன் சுல்தானா.

''இந்த விஞ்ஞான யுகமான 20ம் நூற்றாண்டில் மனிதன் மதத்தினை காரணமாக்க் கொண்டு சண்டை போடுவதைவிட வேறு கேவலமானது ஒன்றுமேயில்லை. மனம் திருப்தியும், சாந்தியும் பெற உதவுவந்த மதம். ஆனால் தற்சமயம் அதிருப்தியும், கலவரங்களுமே நாட்டில் ஓங்கியிருப்பது கவலைக்குரியது'' என்றனர் இருவரும்.

''நாங்கள் திருமலை சென்ற சமயம் கழுத்தை நெரிக்கும் கூட்டம். காரில்



ஸ்ரீ அன்னமய்யா கீர்த்தனைகள் பொறிக்கப்பெற்ற செப்பேடுகளை ரசாயனமுறையில் சுத்தப்படுத்துதல்.

தான் போனாலும் என்றாலும் எங்களால் முடியவில்லை. ஆயிரக்கணக்கான பக்தர்கள் தரிசனத்திற்காக, மணிக்கணக்கில் காத்திருக்கும்போது நாங்கள் வெகு விரைவில், அருமையான விசேஷ விஐபி தரிசனம் செய்ய முடிந்தது. ஒரு கணம் எங்கள் கண்கள் முன்னால் சாதாரண ஏழை பக்தர்கள் எங்களை கோபமுடன் பார்ப்பது போலிருந்தது. ஆனால் அதே சமயம் நாங்கள் இத்தகைய அரிய சலுகைகள் பெறக் காரணம் நாங்கள் கலைஞர்கள் என்பதால்தானே. எங்கள் கலை எங்களுக்கு சம்பாதித்துக் கொடுக்கும் பணத்தைவிட இத்தகைய சில அரிய பெரிய சந்தர்ப்பங்களை நினைத்து எங்கள் மெய் சிலிர்த்தது'' என்றனர்.

''ஸன்னதியில், அவ்வளவு கூட்டத்திற்கிடையிலும் எங்களை 3-4 நிமிடங்களுக்கு மேல் நிற்க வைத்து தரிசனம் செய்வித்தனர். ஆனாலும் மனதில் திருப்தி ஏற்படவில்லை. முகத்தைப் பார்த்தால் பாதங்களைப் பார்க்கவில்லையே, பாதங்களைப்பார்த்தால் முகத்தை சரியாகப் பார்க்கவில்லையே என்ற ஏக்கம் ஏற்பட்டது'' என்றார்கள் சிறிது உணர்ச்சி வசப்பட்டு.

''கோவிலைச் சுற்றி கலையழகுள்ள சிலைக்காட்சிகளை கண்ணாடி போட்டு வைத்திருந்தனர். எனக்கு அவற்றைப் பார்க்க வேண்டும் என்றிருந்தது. ஆனால் கச்சேரிக்கு நேரமாகி விடும் என்று அவசரமாக திருப்பதி வந்து விட்டோம். கோவிலுனுள்ளேயுள்ள பிரும்மாண்டமான தங்க விமானத்தை அருகில் பார்த்த போது எனக்கேற்பட்ட பிரமிப்பு நீங்க சிறிது நேரமாயிற்று (என்ன இருந்தாலும் பேகமும் ஒரு பெண் தானே தங்கம்மீது ஆசையிருப்பது இயற்கை தான்) தங்கத்தை ஈடு செய்வது போல விலைமதிப்பற்ற வேலைப்பாடும் என்னைக் கவர்ந்தது'' என்று மிகவும் உற்சாகத்துடன் கூறினர் பேகம்.

''கோவிலை விட்டு வெளியே வந்து கொண்டிருக்கும் போது அங்கு பக்தர்களுக்கு அளிக்கப்பட்டுக் கொண்டிருந்த மிகச் சிறிய லட்டுகளைப் பார்த்தவுடன் எங்களுடன் வந்த தேவஸ்தான சிப்பந்தியிடம் என்ன திருப்பதி லட்டு இவ்வளவு சிறிய

தாகி விட்டதா என்று தெரியாத் தனமாக கேட்க, இதைக் கேட்ட தேவஸ்தான சிப்பந்திகள் பலர் பலமாக சிரித்தபடி அது இலவச லட்டு என்றும் பணம் கொடுத்து வாங்கும் லட்டு பெரிதாக இருக்கும் என்று விளக்கினர்'' என்றார் சிரித்தபடி பேசும்;

இதற்குள் இவர்களை திருப்பதி, திருச்சானூர் முதலிய கோவில்களுக்கு அழைத்துச் செல்ல கார் வந்து விட்டதால் அவர்களிருவருக்கும் நன்றி கூறி விடை பெற்றேன்.

இதற்கடுத்து நான் சந்திக்க விரும்பியவர் யேசுதாஸ். இவர் விழாவின் இறுதி நாளன்று, மாலை 7-30 கச்சேரி செய்வதாக இருந்தது

சென்னையிலிருந்து வந்த களைப்பு, கச்சேரிக்கு இன்னும் ஒருமணி நேரத்திற்குள் தயாராக வேண்டிய அவசரம். ஆனால் அந்த நிலைமையிலும் அவர் என்னுடன் ஒரு 5 நிமிடம் பேச ஒப்புக் கொண்டார். சாதாரண கைத்தறியாடைதான் அணிந்திருந்தார். (கச்சேரியின் போது மட்டும் பட்டாடை உடுத்தியிருந்தார்) நான் அவசர அவசரமாக பேசினாலும் அவர் நிம்மதியாக, நிதானமாக ஆனால் 5 நிமிடம் மட்டுமே பேசினார்.

''நான் தீவிர ஐயப்ப பக்தன் என்பது அனைவருக்கும் தெரிந்ததுதான். எனக்கு ஏசுவானாலும், ஏழுமலையான் ஆனாலும் ஒன்றுதான். நான் இன்று மாலை எனது நிகழ்ச்சிக்குப் பிறகு தான் திருமலை செல்கிறேன். திரும்பி வர நள்ளிரவாகலாம். நாளை அதிகாலையே சென்னை போகவேண்டும். அதனால் உங்கள் கேள்விக்கு என்னால் லேட்டஸ்ட் பதில் தரமுடியாது. ஆனால் நான் இதற்கு முன் திருமலை வந்துள்ளேன். ஒவ்வொருமுறையும் அவரை தரிசித்து முடித்தவுடனேயே மீண்டும் தரிசிக்க வேண்டும் என்று தோன்றும். இதுதான் கடவுளின் சக்தி என்று நினைக்கிறேன்'' என்று கூறிக்கொண்டிருக்கும் போது சிற்றுண்டி வர நான் அவரிடமிருந்து விடைபெற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

அன்று மாலை அவரது கச்சேரியினை சென்னை தொலைக்காட்சியினர் முழுவதுமாக ஒலிப்பதிவு செய்து கொண்டனர். நல்ல திடகாத்திரமான உடலமைப்பும், நீண்ட அடர்ந்த தலைமுடியும், அடர்ந்த தாடியுமாய் தோற்றமளிக்கும் ஜேசுதாசின் குரல் எவ்வளவு இனிமையானது, நளினமானது என்று நான் சொல்ல வேண்டியதில்லை. அன்று அவர் அட்சர சுத்தமாக பாடிய தெலுங்குப் பாடல்களைக் கேட்டு மனம் மயங்காதவர்களே இருக்க முடியாது. ஆந்திர கவர்னர் ஆடாமல் அசையாமல் இவரது இசையை தாளம் போட்டபடி ரசித்தார்.

இப்படி என் வாழ்நாளில் என்றுமே மறக்க முடியாத நான்கு மிகப் புகழ்பெற்ற, வெவ்வேறு மதங்களைச் சேர்ந்தவர்களை சந்தித்து, பேட்டி காண முடிந்ததை எண்ணி எண்ணி பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

—தி. ஸ்ரீ. தி.



ஸ்ரீ அன்னமய்யா கீர்த்தனைகள் பொறிக்கப்பட்ட செப்பேடுகளில் ஒன்று

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யார்.

**வேதவியாசருடைய சிறப்பென்ன?**

"வ்யாஸ" என்ற சொல் அகலம், விசாலம், பிரிவு, வியாச முனிவர் என்ற பொருள்களைக் குறிக்கும். முதலில் கூறுகட்டாத கனி போல் ஒன்று சேர்ந்திருந்த மூலவேதத்தை நான்காகப் பிரித்தவரானதால் இவருக்கு வேத வியாசர் என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது. வேதவியாஸர் என்ற சொல்லுக்கு வேதத்தைப் பிரித்தவர் எனப் பதப்பொருள். அதனால் பிற்காலத்தில் வேதாந்த பாடம், புராணப் பிரவசனம் செய்யும் இடத்திற்கே வியாச பீடம் எனப் பெயர் ஏற்பட்டது. இன்று உள்ள வைதிக பீடாதிபதிகள் அனைவருமே வியாஸ பீடம் அமர்ந்தவர்கள். பாரத நாட்டின் இணையற்ற அறிவுக்கடல்களாக ஸ்ரீவியாஸ பகவானும், பீஷ்மருமே ஆவார்கள். "வ்யாஸோச்சிஷ்டம் ஜகத் ஸர்வம்" என்பது பண்டையநாள் பழமொழி. இவர் பராசர முனிவருக்கும், சத்யவதிக்கும் பிறந்தவர். ஸ்ரீமந்நாராயணனுடைய ஆவேசாவதாரமே வேத வியாசர். "ஸ்ரீமந் நாராயண; ஸாக்ஷாத் வ்யாஸ ரூபோ மகாமுனி:" என்பது இவரைப்பற்றிய சுலோகம். விஷ்ணுவே வ்யாஸர். வியாஸரே விஷ்ணு வியாசரே வேங்களின் இருப்பிடம். வசிஷ்டருடைய கொள்ளுப்பேரன் என அவருடைய துதி கூறும். முன்பு மத்ஸ்யாவதாரத்தில் பகவான் வேதங்களைக் காப்பாற்றினதற்கேற்ப வியாசரும் வேதங்களை ரக்ஷித்தார். அதனால் இவருக்கு "வேதரக்ஷக: எனவும் பெயர். இதனை விஷ்ணுபுராணம், 'கிருஷ்ணத் வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்" என்றது இவருக்குவேறு வபயர்கள். கிருஷ்ணத்வைபாயனர் மாடர், பாராசர்யர், காநீநர், சத்யவதிசுதர், பாதராயணர். இவ்வாறு பெயர் ஏற்பட இவர் கங்கையின் தீவில் கறுப்பு நிறத்துடன். ஓர் இலந்தை மரத்தடியில் சத்யவதிக்குப்பிள்ளையாக அவதரித்ததே காரணமாகும். சந்யாஸிகள் ஆண்டு தோறும் நடத்தும் சாதுர்மாஸ்யம், கிருகஸ்தர்கள் நடத்தும் உபாகர்மம் என்பன வியாஸ பூஜையேயாகும். விஷ்ணுபுராணம் பிர்மா முதல் கிருஷ்ணத்வைபாயனர் வரை 28 வியாஸர்கள் இருக்கிறார்கள். திருமாலின் பஞ்சகலையில் ஒருவரிவர். வியாசர் முற்பிறவியில் சரசுவதியின் புத்திரர். இவர் நிறம் கருப்பு அதனால் இவரைக் கிருஷ்ணர் எனவும் அழைப்பர். இவருடைய பிள்ளையும் அரணிக்கட்டையிலிருந்தும் தோன்றியவர் பிர்மநிஷ்டரான சுகப்பிரம்மம். இவர் அவதரிக்கும் பொழுது வாலபராக அவதரித்தாராம். இவர் பிறந்தது முதல் அளவற்ற மேதாவிலாசம் உள்ளவர். கடும் தபஸ்வீ. உலகம் முழுவதும் சுற்றுபவர். உலகின் நலனையே கருதி உலகிற்கு நல்ல ஞானோபதேசம் செய்து கொண்டும் வாழ்நாளைக் கழித்தவர். திருமாலின் 27 அவதாரங்களில் இவர் 17 வது அவதாரம் எனவும் கூறுவதுண்டு. இவர் வேதங்களை நான்காகப் பிரித்து ருக்வேதத்தைப் பைலருக்கும், யஜுர் வேதத்தை வைசம்பாயனருக்கும், சாமவேதத்தை ஜைமினிக்கும், அதர்வண வேதத்தைச் சுமந்துக்கும் புகட்டி வேதங்களைப் பல சாகைகளாக அதாவது கிளைகளாகப் பிரித்தார். வேதாந்த பாகத்தின் கருத்தைச் சூத்திரமாக எழுதி அதனைப் பிரம சூத்திரமாக வெளியிட்டார். அந்தப் பிரம்ம சூத்திரம். 4 அத்தியாயங்கள் 16 பாதங்கள், 156 அதிகரணங்கள், 545 சூத்திரங்கள் கொண்டதாக ஆகிறது. இவர் வெளியிட்ட அருமையான பாரதம் ஜனமேஜயரின் சர்ப்ப யாகத்தில் ரோம ஹர்ஷணர், உக்ரசிரவஸ் முதலான மகர்ஷிகளின் திரளில் சூதபுராணிகர் மூலம் 1² ஆண்டுகள் அரங்கேற்றம் செய்யப்பட்டது. மனச் சாந்திக்கும், பகவான் அருள் பெறவும் ஸ்ரீபாகவத புராணத்தை எழுதித் தன் புத்திரரத்தினமான சுகப் பிரம்மத்துக்கு உபதேசித்தார். இந்த வியாசரை மும்மூர்த்திகளின் ஒன்று சேர்ந்த அவதாரம் எனவும் கூறும் செய்யுளுண்டு. இவர் ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவர். இவர் இன்றும் சூக்கும உடலுடன் உலகில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார் எனவும் கருதுவதுண்டு.

**காயத்ரியின் சிறப்பு என்ன?**

காயத்ரி என்றால் இந்த மந்திரத்தை முறைப்படி ஜபிக்கிறவனை நிச்சயம் எல்லாவகையிலும் காப்பாற்றும் தெய்வம் எனப் பெயர்: இங்கு மந்திரமே கடவுள். காயத்ரிகள் பல உண்டு. அந்த அந் முக்கிய வைதிக தேவதைகளுக்கு அந்த அந்த தே தைகளின் அடைமொழியுடன் காயத்ரி உண் ஆனால் பொதுவாகக் காயத்ரீ என அழைத்தா இந்த சூரிய காயத்ரியைத்தான் குறிக்கும். இந் காயத்ரியின் ஆசிரியர் ரிஷி விசுவாமித்திர இந்த மந்திரத்தின் அதிஷ்டான தேவதை சவி என்ற சூரியன். ஒரு மனிதனுக்கு சரீரபலம், மனோ பலம், புத்திபலம், ஆத்மபலம் என்பன மிகவும் இன்றியமையாதன. இவையாவும் ஏற்பட வேண்டு

மானல் காயத்ரீ மந்திரத்தை முறைப்படி ஜபம் செய்து சித்திபெற வேண்டும். பிரம்மாஸ்திரம் என்ற இணையற்ற அஸ்திரத்துக்கு காயத்ரீ மந்திரம் ஆதாரம் ''பிரம் தேஜோபலம் பலம்'' என விசுவாமித்ரர் கூறிய கருத்தில் காயத்ரீ ஜபத்தால் முக்கால ஞானியாகலாம். நீரில் நடக்கலாம். நிழலைப் பிடிக்கலாம். கூடு விட்டுக் கூடு பாயலாம். எதையும் செய்யலாம். அவ்வளவு பெருமையுள்ளது காயத்ரீ மந்திரமாகும். ''காயத்ரியை விஞ்சிய மந்திரம் இல்லை. தாயை விஞ்சிய தைவம் இல்லை'' என்பது மநுவின் திருவாக்கு. வேதங்களுக்கு ஆத்மா போன்றது. வேதக்கருத்தின் ரத்தினப் பெட்டியே காயத்ரியாகும். இதனை இரண்டு லக்ஷம் தடவை முறைப்படி ஜபித்தால் அதற்குப் புரச்சரணம் எனப்பெயர். ஸ்ரீவித்யாரண்யர். ஸ்ரீமதுசூதன சரஸ்வதி போன்றவர்கள் காயத்ரியின் புரச்சரணத்தால் பகவானையே நேரில் கண்டனர் என்பர். வசிஷ்டருக்குள்ள பெரும் ஏற்றத்துக்குக் காரணம் காயத்ரியே முகலாயசக்கரவர்த்தி அக்பருக்கு வீரபல் என்றவர் காயத்ரியின் பெருமையை கண்முன் விளக்கிக் காட்டியுள்ளார். உண்மையைச் சொன்னால் பாரதத்தின் பாக்கியமாகவும, பாரதமக்களாகிய நம் பாக்கியமாகவும் இந்த காயத்ரி மகா மந்திரம் ரிஷிகள் மூலம் நமக்குக் கிடைத்தது. இது எந்நாட்டிற்கும் கிடைக்காத பெரும் புகழாகும். காயத்ரீ மந்திரத்தைப் பிறரைக் கொண்டு ஜபம் செய்யச் சொல்லி அதன் பலனைத் தத்தம் பண்ணிப் பெறலாம். இந்த நிகழ்ச்சி 200 ஆண்டுகளுக்கு முன்பு கண்கூடாக நடந்திருக்கிறது. காயத்ரியின் வடிவம் பற்றி அந்த மந்திரத்தின் தியான சுலோகமான ''முக்தா வித்ரும'' என்பது உரைப்பதாவது: காயத்ரீ தேவியின் திருமுகம். முத்து, பவழம், தங்கம், நீலம், வெளுப்பு என்ற ஐந்து நிறமுள்ளதாக இருக்கும். மூன்று கண் உடையவள் காயதரீ. சந்திரகலையுடன் கிரிடம்தரித்திருப்பள் தத்துவம்உணர்த்தும் எழுத்து வடிவம் உள்ளவள். வரத முத்திரை அபய முத்திரை கொண்ட திருக்கைகளுடன். அங்குசம், சாட்டை, கபாலம், கயிறு, சங்கு சக்கரங்களையும் இரண்டு தாமரை மலர்களையும் மற்றத் திருக்கைகளில் ஏந்தி இருப்பள். காயத்ரீ ஜபத்துக்கு முன் ஓதவேண்டிய காயத்ரீ ஆஹ்வான மந்திரமான, ''ஆயாது வரதாதேவி'' என்ற மந்திரம் கூறுவதாவது: உலகத் தாயே! காயத்ரீதேவியே! நீ உன்னை ஜபிப்பவர்களுக்கு விரும்பும் பயன் அனைத்தையும் தருகிறாய். நீ நித்யமானவள். லேதாந்தத்தினால்தான் உன்னை அறியமுடியும். நீ வேதங்களுக்குத் தாயாக இருப்பவள். அத்தகைய நீ அடியேன் இருப்பிடம் அருகி வரவேண்டும்! எல்லா எழுத்தின் வடிவானவளும் சரசுவதி வடிவானவளும் நீ. நீ எனது இந்த காயத்ரீ மந்திரத்தைக் கருணையுடன் ஏற்கவேண்டும்.

(தொடரும்)

இராமாயணம், மகாபாரதம் ஆகிய இரண்டு காப்பியங்களும் இந்து மதத்தின் இரு கண்களெனப் போற்றப்படுகின்றன. வடமொழியில் இராமாயணத்தை முதலில் எழுதியவர் வால்மீகி. சப்த சிரஞ்சீவிகளில் ஒருவரான மார்க்கண்டேயர் தென் திசையிலுள்ள பதிகளையெல்லாம் கண்டு வழிபடுமாறு வால்மீகியிடம் கூறினார். அவ்வாறு தென்னக யாத்திரை மேற்கொண்ட வால்மீகி முனிவர் 'நான் இங்கு இருக்கிறேன்' எனும் அசிரீரியைக் கேட்டார். அவ்விடத்திலே இருந்த சுயம்புலிங்கத்தை முனிவர் வழிபட்டார். சிவபெருமானும் அங்கே காட்சியளித்து அருளினார். முனிவர் விருப்பப்படியே அவ்விடத்திற்கு வான்மீயூர் என்ற பெயர் உண்டாயிற்று.

விளக்கேற்றவும் நிவந்தங்கள் விடப்பட்டன திரிபுரசுந்தரி ஆலயத்திலுள்ள கருவறையின் புறச் சுவரிலுள்ள சோழ மன்னர்களில் கல்வெட்டுகளிலிருந்து மேலே கூறப்பட்ட நிவந்தங்கள் பற்றி அறியலாம். கி. பி. பதினாறு, பதினேழு நூற்றாண்டுகளில் அரசாண்ட விஜயநகர மன்னர்களின் காலத்தில் வாழ்ந்த அருணகிரிநாதர் இங்குள்ள முருகப் பெருமான்மீது திருப்புகழ்ப் பாடல் ஒன்றைப் பாடியுள்ளார். நாயக்க மன்னர்களின் காலத்தில் வாழ்ந்த அப்பைய தீட்சிதர் இங்குள்ள ஈசரை வழிபட்டார். தீட்சிதர் மற்றும் அவரது மனைவியார் ஆகியோரின் திருஉருவங்களும் திருவான்மியூர் ஆலயத்தில், ஒரு தூணில் அமைக்கப்பட்டுள்ளன.

அருகில் அண்மையில் ஏற்பப்டுத்தப்பட்ட மகா கணபதி சந்நிதியும் உள்ளது. அடுத்துள்ள மண்டபத்தில் தியாகராஜர் தனி சந்நிதியில் காட்சியளிக்கிறார் திருவொற்றியூரைப் போலவே இதுவும் சப்தவிடங்கள் தலங்களில் சேராத தியாகராஜ தலம். இம்மண்டபத் தூண்களில் ஆஞ்சநேயரும் பழனியாண்டவரும் உள்ளனர். அண்மையிலுள்ள மண்டபத்தில் மூலவர் மருந்தீசர் சுயம்புலிங்கமாக அருளாட்சி புரிகிறார். இங்கு அறுபத்து மூவர், விநாயகர், முத்துக்குமார சுவாமி, நடராஜர், கெஜலட்சுமி, வீரபத்திரர் ஆகியோர் உள்ளனர். கருவறையின் வெளிச் சுவர்களில் துர்க்கை, நான்முகன், விஷ்ணு, தக்ஷிணா மூர்த்தி, விநாயகர் ஆகிய உருவங்கள் இடம் பெற்றுள்ளன.

# வாட்டம் தீர்த்திடும் வான்மியூர் ஈசர்

அது இன்று "திருவான்மியூர்" என்று அழைக்கப்படும் இத்தலத்தில் வான்மீக முனிவருக்கு ஒரு தனி ஆலயம் உள்ளது. இவ்வூர் சென்னை மாநகரின் தெற்குக் கடைசியில் உள்ளது. இன்று நன்கு வளர்ச்சியுறும் பகுதிகளுள் இதுவும் ஒன்று.

திருவான்மியூரில் மிகப் பழமையான சிவாலயம் ஒன்று உள்ளது. பல்லவர்களின் காலத்திலேயே (கி.பி. ஏழு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை) இக்கோயில் சீரும் சிறப்புமாக திகழ்ந்திருக்க வேண்டும். அக்காலத்தில் வாழ்ந்த சைவ சமயச் சான்றோர்களான திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இப்பதிக்கு வருகை தந்ததுடன், ஈசர் மீது தேவாரப் பதிகங்களை பாடியுள்ளனர். பல்லவர்களுக்குப் பின் தமிழகத்தில் அரசோச்சிய சோழர்கள் காலத்தில் ஆலயத்தின் பல பகுதிகள் புதுப்பிக்கப்பட்டதுடன், ஆலயத்தில் வழிபாடு நடைபெறவும், நந்தா

ஆலயத்தின் கிழக்கு, மேற்கு ஆகிய இரு வாயில்களிலும் இரு ஐந்து நிலை இராஜகோபுரங்கள் தோற்றமளிக்கின்றன. கிழக்கு வாயிலின் வழியே உட்சென்றதும் வலதுபுறத்தில் திரிபுரசுந்தரி அம்மனின் சந்நிதி உள்ளது. கருவறையும் அதன் வெளிப்புறமும் பழமையின் சுவடுகளை அப்படியே கொண்டுள்ளன. தூண்களின் பல பகுதிகளில் நுண்ணிய பல சிற்பங்கள் உள்ளன. அழகிய தோற்றத்துடன் அருள் பாலிக்கும் திரிபுர சுந்தரி அம்மன், விசேஷ நாட்களில் சிறந்த அலங்காரங்களுடன் காட்சியளிப்பதுண்டு. திருவிழா மூர்த்தியான சுக்கிரவார அம்மன் தனிச் சந்நிதியில் கொலுவிருக்கிறாள். வெள்ளிக் கிழமைகள், மற்றும் விசேஷ நாட்களில் சுக்கிரவார அம்மன் ஆலயத்தைச் சுற்றி உலா வருவது உண்டு.

வள்ளி தெய்வயானையுடன் காட்சியளிக்கும் முருகப் பெருமானின் சந்நிதி அருகிலுள்ளது. அதற்கு

வெளிப் பிரகாரத்தில் தலவிருட்சமான வன்னி மரம் உள்ளது.

வடமொழியில் ஆதியில் இயற்றப்பட்ட தலபுராணத்தை 1895ல் அஷ்டாவதானம் பூவை கலியாண சுந்தரர் தமிழில் வெளியிட்டார். சிவபெருமானின் சிரத்திலுள்ள கங்கையிலிருந்து சிந்திய ஐந்து நீர்த்துளிகள் ஐந்து புண்ணிய தீர்த்தங்களாக உருக்கொண்டன; அவையாவன ஜென்மநாசினி, காமநாசினி, பாபநாசினி, ஞானதாயினி, மோட்சதாயினி

திரு. எம். ராஜகோபாலன்
M.A.,(History), M.A.,(Tamil)
சென்னை-41.

சந்திரன், இந்திரன், ஆதவன், இரட்சசு என்ற வானரன், இயமன், பிருங்கி, இராமர் போன்றோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர்.

தெய்வப் பசுவான காமதேனு வசிட்டமுனிவரின் சாபத்திற்கு

ஆளாகிக் காட்டுப் பசுவாக மாறி யது. பல இடங்களில் அலைந்து திரிந்த பின்னர் அப்பசு திருவான்மியூரி லுள்ள சுயம்புலிங்கத்திற்குப் பாலால் அபிஷேகம் செய்து வந்தது. அப் பகுதியை ஆண்டு வந்த சதயூ என்ற மன்னன் அப்பசுவைக் கைப்பற்ற முயன்ருன். தப்பி ஓடுகையில் அப் பசுவின் குளம்பு சிவலிங்கத்தில் பட்ட தால் வடு உண்டாயிற்று. இன்றும் சிவலிங்கத்தின் உச்சியின் அவ்வடு உள்ளதாம். காமதேனுவால் பால் அபிஷேகம் செய்யப் பெற்ற ஈசர், பால் வண்ணநாதர் என அழைக்கப் பட்டார். காமதேனுவின் சாபமும் நீங்கிற்று.

சிவ பெருமான் பார்வதியைத் திரு மணம் செய்து கொண்டபோது அனை வரும் கைலாயத்தில் இருந்ததால் அப்பகுதி தாழ்ந்தது; தென் பகுதி உயர்வுற்றது. இரண்டையும் சம நிலை செய்யும் பொருட்டு அகத்திய மாமுனிவர் தென் திசை நோக்கி அனுப்பப்பட்டார். சிவபெருமானின் அருளால், நினைத்த இடத்தில் அவ ரது திருமணக் கோலத்தைக் காணும் பேற்றை அகத்தியர் பெற்ருர். திரு வான்மியூரில் சிவபெருமான் அகத் தியருக்குத் தனது திருமணக் கோலத் தைக் காட்டினுர். உலகில் ஏற்படும் நோய்கள், அவற்றிற்கான மருந்து கள், அம்மருந்துகளை தயாரிக்கும் முறை ஆகியவற்றை அகத்தியருக்கு ஈசன் அருளினுர். எனவே திருவான்மி யூர் ஆலயத்தில் உள்ள ஈசன் மருந் தீசர் எனப் பெயர் பெற்ருர்.

நான்கு வேதங்களும் சோமுகாசுர ஞல் கைப்பற்றப்பட்டு மாசு அடைந் தன. தம்மீது படிந்த களங்கம் திரும் பொருட்டு அவை திருவான்மி யூர் ஈசனை வழிபட்டன. எனவே வேதபுரி என்ற பெயர் இத்தலத் திற்கு ஏற்பட்டது. யுகத்தின் ஆரம் பத்தில், தனக்குப் படைக்கும் சக்தி யைப் பெறும் பொருட்டு நான்முகன் திருவான்மியூர் ஈசனை வழிபட்டார். அவர் ஏற்படுத்திய தீர்த்தமே பிரம தீர்த்தமாகும். திருவான்மியூரில் ஒரு மாபெரும் ஆலயத்தை முதலில் அவரே ஏற்படுத்தினுர். ஆலயத்தைச் சுற்றி மாடவீதிகளையும், இல்லங்களை யும் அமைத்ததுடன், ஆகமத்தில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு ஏற்ப அபிஷேக ஆராதனைகளைச் செய் வித்தார். பல ஆண்டுகளுக்கு பின் இப்பகுதியில் ஆட்சி செய்த சதயூ எனும் வேந்தன் ஆலயத்தின் பல பகுதிகளைப் புதுப்பித்துச் சீராக் கினுன்.

பதிகள் தோறும் சென்று பதிகங் கள் பாடிய திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருவான்மியூர் ஈசனைப் போற்றிப் பாடியுள்ளனர். திருஞான சம்பந்தரின் முதல் பதிகம் 'இந்தளம்' என்ற பண்ணிலும், இரண் டாம் பதிகம் 'கௌசிகம்' என்ற பண்ணிலும் அமைந்துள்ளன. இயற்கை வளமும், செல்வச் செழிப்பும் மிக்க இப்பதியில், அறி வும், ஒழுக்கமும், இறைவன் மீது அளவற்ற பக்தியும் உடைய அடியார் கள் இருப்பதாக சம்பந்தர் கூறு கிருர். அடியாரின் அல்லலைக்களையும் பொருட்டு எண்ணற்ற திருவிளை யாடல்களைப் புரிந்த சிவபெருமானின் திருவடிகளைப் பேணுவோர் பேரின்ப வாழ்வைப் பெறுவர் என்பதே அவ ரது உறுதியான நம்பிக்கை.

'' மஞ்சு லாவிய மாடம திற்பொலி
மாளிகைச்
செஞ்சொ லாளர்க டாம்பயி லுந்திரு
வான்மியூர்த்
துஞ்சு வஞ்சிரு ளாடலு கக்கவல்
லீர்சொலீர்
வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்
னருள் வைத்ததே''

என்று திருநாவுக்கரசரும் சிவபெரு மானின் பெற்றியையும், அவரது அருள்புரியும் தன்மையையும் பாடிப் பரவுகிருர்.

விண்ட மாமலர் கொண்டு விரைந்து
நீர்
அண்ட நாயகன் தன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே'

என்று அருணகிரிநாதரின் திருப்புகழ் திருவான்மியூரிலுள்ள முருகப்பெரு மானைப் போற்றுகிறது. திருவான்மி யூர் ஈசனைப் பாமாலை சூடி வழிபட்ட பாம்பன் குருபர சுவாமிகளின் சமாதி திருவான்மியூரில் உள்ளது.

இத்தகைய சிறப்புக்களைப் பெற்ற திருவான்மியூர் ஆலயம் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் உதவி யுடன் 1913ல் புதுப்பிக்கப்பட்டது. 1961, 1979 ஆகிய ஆண்டுகளிலும் ஆலயத்தின் சில பகுதிகள் புதுப் பிக்கப்பட்டுக் கும்பாபிஷேகம் நடை பெற்றது. 1983-84 ஆண்டுகளில் அதிக பொருட் செலவில் கிழக்கு வாயிலில் ஒரு ஐந்து நிலை இராஜ கோபுரம் கட்டப்பட்டு, பிப்ரவரி (1984) மாதம் கும்பாபிஷேகம் நடை பெற்றது. ஆலயத் திருப்பணிக் குழுவினரின் விடாமுயற்சியால் மேற்கு வாயிலில் ஒரு ஐந்து நிலை கோபுரமும், உட்புறம் மகாகண பதிக்கு ஒரு தனி சந்நிதியும் மிகக் குறுகிய காலத்தில் எழுப்பப்பட்டன. காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சுவாமிகள் முன்னிலையில் மகாகண பதி சந்நிதிக்கும், புதிய இராஜ கோபுரத்திற்கும் இந்த ஆண்டு மார்ச் மாதம் பத்தாம் தேதியன்று கும்பா பிஷேகம் நடைபெற்றது.



# அஷ்டாக்ஷர மஹா மந்த்ரம்

கடவுள்களில் உயர்ந்தவன் ஸ்ரீமந் நாராயணன். ப்ரமாணங்களில் உயர்ந்தது வேதம். மந்த்ரங்களில் ப்ரஸித்தமானது திருவஷ்டாக்ஷரம்.

வேதாச் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி
நதைவம் கேசவாத் பரம்
யதா ஸர்வேஷு தேவேஷு
நாஸி நாராயணாத் பர:
ததா ஸர்வேஷு மந்த்ரேஷு
நாஸ்திசாஷ்டாக்ஷராத் பர:

என்கிற ப்ரமாணங்கள் மேற்கூறியவற்றை நிரூப்பிக்கின்றன.

ஷடக்ஷரம், த்வாத ஸாக்ஷரம், அஷ்டாக்ஷரம் என்ற மூன்று மந்த்ரங்களுக்கும் வ்யாபக மந்த்ரம் என்ற பெயர். இந்த மூன்று மந்த்ரங்களும், பகவான் எங்கும் வ்யாபித்திருக்கிறான் என்பதை ப்ரகாசபடுத்துகிறபடியால் இவற்றுக்கு வ்யாபக மந்த்ரம் என்ற பெயர் ஸம்பவித்தது.

முதலில் ப்ரணவம் (ஓம்), பிறகு நம: அதற்கு பிறகு விஷ்ணவே என்ற பதம். இதுவே ஷடக்ஷரம். முதலில் ப்ரணவம், பிறகு நம:, பகவதே என்ற பெயர், அதற்கு பிறகு வாஸுதேவாய. இவற்றை சேர்த்து அனுஸந்தித்தால் அதுவே த்வாதஸாக்ஷரம். முதலில் ப்ரணவம், பிறகு நம: அதற்கு பிறகு நாராயணாய என்ற பொருள். இதுவே திருவஷ்டாக்ஷரம்.

மந்த்ரங்களில் 'பகவந்' மந்த்ரம் ப்ரஸித்தம். 'பக' என்ற குணங்களை பெற்றவன் 'பகவான்'. 'பக' என்றால் ஆனந்தம் என்று அரவிந்தர் கூறியுள்ளார். 'பக' என்ற பொருள் ஸௌர்ய ஸாவித்திரிக்கு குறிப்பிடதக்கது. ஐஸ்வர்யம், வீர்யம், யஸஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்கியம் என்னும் குணங்களை தெரிவிக்கிறது. அவைகளை உடையவன் பகவான் என்று விஷ்ணு புராணம் கூறுகிறது.

ஐஸ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய
வீர்யஸ்ய யஸஸ: ஸ்ரீய:
ஞான வைராக்யயோ ஸ்சைவ
ஷண்ணாம் பக இதிரன (Vi. 5. 74)

பகவன் மந்த்ரங்களுக்குள் வ்யாபக த்ரயம் ப்ரதாநம். வ்யாபகத்ரயங்களுக்குள் அஷ்டாக்ஷரம் ப்ரதாநம் என்பது ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனுடைய திருவுள்ளம். 'விஷ்ணு' என்ற சொல்லுக்கு வ்யாபித்திருப்பவன் என்று பொருள். வாஸுதேவ என்ற சொல்லுக்கும் அதே பொருள். ஆனால் இந்த இரண்டு சொற்களும் 'பகவான்' நிறைந்திருக்கிறான் என்பதை தெரிவிக்கின்றனவே தவிர அவன் எங்கு வ்யாபித்திருக்கிறான் என்பதைத் தெரிவிக்கவில்லை. அதை 'நாராயண' சப்தம் திட்டவட்டமாக கூறுகிறது. நராணாம் அயனம்–நாராயண அவனைச் சார்ந்த உலகம், நரா: அயனம் யஸ்ய (இந்த உலகத்தில் பகவான் உள்ளும் புறமும் வ்யாபித்து நிரம்பி யிருக்கிறான்) என்று நாராயண சப்தத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப் பெற்றிருக்கின்றன. நாராயணோப நிஷத்து இவ்வாறு விளக்குகிறது.

அந்தர்பஹிஸ்ச தத்ஸர்வம்
வ்யாப்ய நாராயண ஸ்தித:

அஷ்டாக்ஷர மந்தரம் வ்யாபக மந்த்ரங்களுக்குள் ப்ரதாநமாகையால் இதை நான் வணங்குகிறேன் என்கிறார் ஸ்ரீஸ்வாமி தேசிகன்.

யதந்த ஸ்தமசேஷண வாங்மயம்
வேத வைதிகம்
தஸ்மை வ்யாபக முக்யாய மந்த்ராய
மஹதே நம:
(ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்தி)

ப்ரணவத்தில் முதல் அக்ஷரம் 'அ' விஷ்ணுவே உலகத்தை ஸ்ருஷ்டிப்பவன், காப்பவன், அழிப்பவன், இரண்டாவது அக்ஷரம் 'ம' விஷ்ணுவுக்கு சேஷ பூதனும் ஜீவன்களையும், 'உ' ஜீவன்களுக்கும், விஷ்ணுவுக்கும் பரஸ்பர ஸம்பந்தமாகும் 'ஸ்ரீ'யை விளக்குகிறது.

ப்ரபன்னனுக்கு நாராயணனிடத்தில் பக்தி உள்ளமையால் அவனுக்கு ஸ்ரீயிடமும் பக்தியுள்ளது. இது ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய ப்ரதாந சித்தாந்தம். 'ஸ்ரீ'யை வேதாந்த தேசிகர் 'ஸ்ரேயா பூர்த்தி'—ஸ்ரேயஸ்ஸை கொடுப்பவன் என்று வர்ணித்திருக்கிறார். ஆகையால் ஸ்ரீயும், நாராயணனும் ஒன்றேயாவர்கள். ஸ்ரீராமானுஜரும் 'ஸ்ரீபாஷ்ய' க்ரந்தத்தில் ப்ரஹ்மனே 'ஸ்ரீநிவாஸ' (ப்ரஹ்மனி ஸ்ரீநிவாஸே) என்று கூறியுள்ளார்.

டாக்டர். கே. ஸி. அ. ராஜகோபால், M.A., Ph,d.,
திருப்பதி.

இரண்டாவது அக்ஷரம் 'நம:' ஜீவர்கள் யாவரும் நாராயணனுக்கு சேஷ பூதர்கள் என்று குறிப்பிடகிறது. 'நம:' என்ற சொல் தன்னை ரக்ஷிப்பதற்காக ப்ரார்த்திப்பது. ஆனால் ரக்ஷிப்பது என்பது ஜீவனுக்கு உட்படாது. 'நம:' என்ற சொல் ஸ்துதியையும் கூறுகிறது. ஆகையால் நம: ஆத்ம ஸமர்பணம் சரணகதிக்கு ஸமமாகும். எவ்வித கஷ்டத்திலும் ஜீவன் (ஆன்மா) பகவானை நினைக்க வேண்டும்.

நீரை உற்பத்தியாகி, அதையே ப்ரதான ஸ்தானமாகக் கொண்டு, அதில் அமர்ந்திருப்பவனையே எல்லோரும் நாராயண என்று வராஹ புராணம், மனுஸ்ம்ருதி என்ற நூல்கள் கூறுகின்றன. (மனுஸ்மருதி 1.19) நீரில் மற்ற நான்கு பூதங்களான தத்துவங்கள் அடங்கியுள்ளன. இத்தத்துவங்களுக்கு மூலஸ்தானம் நரா: ஆகையால் இந்த தத்துவங்களையே நரா: என்று கூறுகிறார்கள். அதே மாதிரி ஆன்மாக்களை நரா: என்றும், ஆன்மாகளுக்கு மூல

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | | | | —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்) |
| 6-15 | ,, | 6-45 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-45 | ,, | 1-00 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 1-30 | ,, | 7-00 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சுத்தி, இரவு மணி |
| 7-30 | ,, | 8-30 | ,, | —ஸர்வதரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | —ஸர்வ தரிசனம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 | ,, | 5-15 | ,, | —நித்ய அர்ச்சனை |
| 5-15 | ,, | 5-45 | ,, | —சுத்தி, முதல் மணி |
| 5-45 | ,, | 7-00 | ,, | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சாலிம்பு |
| 7-30 | ,, | 9-00 | ,, | —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அலங்காரம், 2வது மணி |
| 10-00 | ,, | 8-00 | இரவு | —ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்) |
| 8-00 | ,, | 8-30 | ,, | —இரவு மணி |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| II ஆர்ஜிதம் | | | III சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ½ அளவு | ரூ. 55/- | (அ) நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- | (ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 40/- | (இ) அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- | (ஈ) ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- | (உ) பூராபிஷேகம் (வெள்ளிக் கிழமையில் மட்டும்) | ரூ.100-00 |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- | (ஊ) ஊஞ்சல் சேவை (வெள் ளிக்கிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 90/- | (எ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- | (ஏ) யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

ஸ்தானம், இருக்குமிடமும் நாராயணனே என்றும் கூறுதல் வேண்டும்.

ஆபோ நாரா இதி ப்ரோக்தா:
ஆபோவை நரஸூநவ: |
தாய தஸ்யாயனம் பூர்வம்
தேனநாராயண: ஸ்ம்ருத: ||

நராஜ்ஜாதானி தத்வானி
நாராணீ தி ததோ விது: |
தான்யேவ சாயனந்தஸ்ய
தேனநாராயண: ஸ்ம்ருத: ||

நம்மாழ்வார் இந்த சப்தத்தை 'எண் பெருக்கந்நலத்தொண் பொருளீறிலவண் புகழ் நாரணன்' (அனந்த ஞானனந்த கல்யாண குணங்களுடையவன் நாராயணன்) என்றும், 'நாரணன் முழு வேழுலகுக்கும் நாதன் (நாராயணன் அனைத்து லோகங்களுக்கும் நாதன்) என்றும் திருவாய்மொழி (1-2-10, 2-7-2) பாசுரத்தில் கூறியுள்ளார்.

ஜீவர்களாகிற நமக்குத் தாய் திருமந்த்ரம். நமக்கு நம்மை பற்றிய உணர்வு அதாவது நாம் பகவானுக்கு சேஷபூதர் என்கிற ஞானம் அஷ்டாக்ஷரத்தால் உண்டாகிறது. சேஷபூதனை உடன் ஆன்மாவை சுத்தமாக்கி மோக்ஷத்தை அடைய செய்கிறது. ஆகவே நமக்கு ஞானத்தை உண்டாக்கி நம்மை ஸத்தாக உருவாக்குவதால் திருமந்த்ரம் நமக்குத் தாய். பகவான் மோக்ஷகாரகன் என்ற படியால் நாம் பரம புருஷார்த்தமான மோக்ஷதிற்காகவே அவனை வணஙகுகின்றோம்.

'அன்று நான் பிறந்திலேன் பிறந்த
பின் இறந்திலேன்'

என்றார் ஆழ்வார்.

திருமங்கை ஆழ்வார், எம்பெருமானிடமே அஷ்டாக்ஷர மஹா மந்திரத்தையும் அதன் அர்த்த விசேஷங்களையும் க்ரஹிக்கும் பாக்யம் பெற்றவர். நாராயண சப்தத்தை 'நலம் தரும் சொல்', என்றும், பெற்றதாயினுமாயின செய்யும்' என்றும் வர்ணித்திக்கிருர்.

ப்ரஹ்லாதன் எப்பொழுதும் திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தையே ஜபித்து வந்தபடியால் எவ்வித ஆபத்துக்கு உட்படவில்லை என்கிறான் கம்பன்.

இந்த மந்த்ரத்தில் ப்ரணவம் (ஓம்) பரந்யாஸத்தையும், நம: உபாயத்தையும், நாராயணய பரம புருஷார்த்தத்தையும் (உபேயம்) விளக்குகிறது.



# வாயினல் பாடி மனத்தினல் சிந்தித்து

ஆதியந்தமில்லாத நமது ஸனாதன தர்மத்தில் உள்ள வேத விளக்கங்கள், நெறி முறைகள் எல்லாம் நம் மனதைச்சுற்றியேவியாபித்துள்ளது. மனம் என்னும் இல்லத்தை சுத்தப் படுத்தி,சிரத்தை என்னும் ஜன்னலைத் திறந்து வைத்துவிட்டால் குளிர்த் தென்றல் போன்ற ஆண்டவன் கருணைகொண்டு அவ்இல்லத்தில் குடியேறுவான். நாம் வீடுபேறு அடைய வழிவிடுவான். எங்கும் வியாபித்திருக்கும் அவனை நம் அறியாமையால் எங்கேயும் காணுமல் தேடி அலைய வேண்டாம். நம் மனம் என்னும் மாய மேடையில் கண்டுகளிக்கலாம். இந்த ஏகாந்த நிலையை,

'' ஆதிமுதலாகி நின்ற அரியென்ற அட்சரத்தை

ஓதியறிந்துள்ளே உணர்வதினி எக்காலம்''

என்று பாடுகிறார் பக்குவப்பட்ட பத்திரகிரியார்.

பரம்பொருளை அடையும் பல மார்க்கங்களில் பக்தி மார்க்கமும் ஒன்றாகும். பண்டிதனும், பாமரனும் கடைப்பிடிக்க எளிதானது. அதிலும் ஞானத்தோடுக் கூடிய பக்தி விரைவில் முக்தியளிக்க வல்லது. இதை ஆச்சார்யர் சங்கரர் பல இடங்களில் எடுத்துக் காட்டியுள்ளார்கள். ஞானப் பிழம்பான ஆச்சார்யரவர்கள் பல பக்திப் பாடல்களை இயற்றி உலகத்தோர் உய்ய வழி பண்ணியிருக்கிறார். திருச்செந்தூர் முருகனை, சுப்பிரமண்ய புஜங்கத்தில், 'எல்லேறும் ஆறுமுகச்சோதி என் இதயத்திருந்தே நறுந்தேன் எனும் பாடல் தருமே' என்று புகழ்ந்துள்ளார். பாடிப் பாடியே பரமகமடைந்த பக்த சிரோன்மணி அருணகிரி 'பாடும் பணியே பணியாய் அருள்வாய்' என்று வேண்டி நிற்கின்றார். இந்தக் கலியுகத்தில் இப்பணி நற்பணியாகக் கருதப்படுகிறது எண்ணிலடங்கா பெரியோர்கள் இம்மார்க்கத்தைத் துணைகொண்டு முக்தியடைந்த நிகழ்ச்சிகளை நாம் அறிவோம். தியாகராஜரின் திவ்விய நிலையறிந்த சரபோஜி மகாராஜா பொன்னும், பொருளும் அனுப்பி அவரை ஆஸ்தான வித்வானாக வருந்தியழைத்தார். தியாகைய்யர் அதை மறுத்து விட்டு,பஞ்சத்தில், பட்டினியில் வாடினாலும், 'நிதி ஸாலசுகமா ராமுனி சன்னதி ஸேவ சுகமா?' என்று பாடிப் பரவசமுற்றார். இது எப்படியிருக்கிறது என்றால் கங்கா ஜலத்தை தவிர்த்து பாசிப் படிந்த கிணற்று ஜலத்தில் ஸ்னானம் செய்வதற்கு ஒப்பாகும் என்கிறார். திருமந்திரம், 'பாடுமின் பாடிப் பணியின் பணிந்தபின் கூடிய நெஞ்சத்துக் கோயிலாய் கொள்வனே' என்று பேசுகிறது. இப்பணி நிலையை சற்றே ஆய்வோமாக.

திருமந்திரம் கூறும் வாக்கை உற்றுக் கவனிக்கவும். பாடிப்பணியின், பணிந்த பின்பு கூடிய நெஞ்சத்தில் இறைவன் கோயில் கொண்டு உறைவான் என்று பேசுகிறது. பணிவு வேதாந்திக்கும், பக்தனுக்கும் இருக்க வேண்டிய ஓர் முக்கிய உபாசனையாகும். பணிவு பரமபதத்தைக் காட்டும். வெள்ளம் அதிகமாக வரும்போது நாணல் பணிந்து பின் நிமிர்ந்து பிழைத்துக் கொள்கிறது. பணிய மறுத்த பனைமரம் வேரோடு பிடுங்கி எறியப்பட்டுத் தண்ணீரில் அடித்துச் செல்லப்படுகிறது பணிவு எப்போது வரும்? அகங்காரத்தை, நான் என்னும் மமதையை விட்டால் வரும். அகங்காரம் ஆன்மீக முன்னேற்றத்திற்கு ஓர் பெரும் எதிரியாகும். இந்த நிலையை, 'ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்' என்று கூறி பத்திரகிரியார் வருந்துகிறார். இதே நிலையை தாயுமானவர் 'ஆங்காரம் என்னுமதயானை வாயில் கரும்பாய் ஏங்காமல் எந்தையருள் எய்துநாள் எந்நாளோ?' என்று கூறுகிறார்.

அடுத்து சினம். இதுவும் ஓர் தடுப்புச்சுவர். அதைக் கடக்க வேண்டும். சினத்தைத் தவிர்த்து மனம், அன்பு என்ற தெள்ளிய நீரில் நினைந்துருக வேண்டும். தேவாரம் கூறுவதுபோல் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க' வேண்டும். இல்லை எனின் இவ்வாழ்க்கை பாழ்நிலம் போல் வீணாகும். பிறவி பயனற்றதாகிவிடும். தாயுமானவர் 'சினம் இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மனம் இறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே' என்று நம்மை எச்சரிக்கிறார்.

---

திரு S. நம்பி-பம்பாய்.

---

'மனம் கண்ணாடி போல் இருக்க வேண்டும். அப்போதுதான் உள்ளதை உள்ளபடி தெள்ளெனக் காட்டும் என்று இராமலிங்க அடிகள் துதிக்கிறார். அவர் பரம்பொருளிடம் 'உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று வேண்டி நிற்கிறார்; எனவே சுத்த மனம் ஆன்மீக பாதைக்கு ஓர் அடிக்கல் என்று தெள்ளென விளங்குகிறது.

இந்தக் கட்டுரையின் தலைப்பின் படி வாய் முன்னால் வந்தாலும் தத்

## திருமலையில்
### தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்: 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண்: 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண்: 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

துவப்படி மனம் முதலில் வருகிறது. இவ்வுலகில் நிகழும் நிகழ்ச்சிகள் முதலில் மனதில்தான் தோன்று கின்றன. அதன்பின் வார்த்தையாக வெளி வருகிறது. அதுவே கடைசி யில் செயல்களாக நிகழ்கின்றன. இதைத்தான் மனம், வாக்கு, காயம் என்றார்கள் ஆன்றோர்கள். எனவே இவ்வுலக நிகழ்ச்சிகளுக்கு ஆரம்ப ஸ்தானம் மனதுதான். ஆகையால் தான் நம் தத்துவங்கள் நம் மனதை சுற்றியே அமைந்துள்ளன. ஆதிசக்தி பராசக்தி. அவள் மூலாதாரத்தில் அக்னிப்பிழம்பாக இருக்கிறாள். அவள் அநுக்கிரகத்தால் நம் எண்ணங்கள் நாபியிலிருந்து, இருதயத்திலிருந்து கடைசியில் தொண்டையிலிருந்து வார்த்தையாக வெளி வருகிறது. சமஸ்க்ருதம் நாபியிலிருந்து கிளம்பு வதால் அது தெய்வத தன்மை பெற றது. அடியிலிருந்து கிளம்புவதால் இதற்கு ஆகர்ஷணசக்தி அதிகம். ஆழத்தில் உள்ள அத்தனையும் உத்தமமானவை. ஆழ்கடலில் தான் முத்தும், பவழமும் விளைகின்றன. பூமி யின் ஆழத்தில்தான் தங்கமும், வைரமும் கிடைக்கின்றன.

ஆகவே, உலகில் நல்லது நடக்க வேண்டுமென்றால் முதலில் நல்ல எண் ணம் மனதில் உதிக்க வேண்டும். வாயிலிருந்து வெளிவரும் வார்த் தைக்கு உருவம் கொடுப்பது இந்த உடம்பு அதாவது மெய் (கர்மேந்திரி யங்கள்). வாயும், உடம்பும் சேர்ந்து செய்யும் காரியம் உலகத்து நன்மை பயக்கும் என்றால் அதற்கு வாய்மை (வாய்+மெய்) என்று பெயர் கொடுத் தார்கள். சுப்பிரமணிய பாரதி 'எண் ணிய முடிதல் வேண்டும், நல்லென எண்ண வேண்டும்' என்றான். நினைப்பு செம்மையானால் ஆண்டவன் கிருபை கிடைக்கும். இது வேதம் சொல்லும் உறுதி. ஆகையால்தான் திருமந்திரம் 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்று முழங்குகிறது.

இந்த மனத்தூய்மை அவ்வளவு எளிதாக வந்துவிடாது. இதற்கு

இடைவிடாத முயற்சியும், அசைக்க முடியாத பக்தியும் அவசியம். மனம் தூய்மை அடைந்தால்தான் தியானம் கைகூடும் தங்கம்சுடச்சுட ஒளிர்வது போல், இடையறாத முயற்சினுல் நம் மனத்தை பக்தி என்னும் நெருப்பில் சுட்டு எடுக்க வேண்டும். அது ஜோதி ரூபமான பரமாத்ம சொரூபமாக மாற்றவும் செய்யும். தூய்மையான மனம் தூய்மையே வடிவமான பர மாத்மாவேயே தேடும். எப்படி மலரி லிருந்து நறுமணம் வீசுகிறதோ அதைப் போல் தூய்மையிலிருந்து இன்பமும், இனிமையும், தெய்வீக மும் ஒளி வீசும்.

பரமாத்ம தத்துவத்தை, அதன் அருமை பெருமைகளை பேசுவதும், பாடுவதும் உயர்ந்த ஸ்துதியாக கருதப்படுகிறது. தேவாரம் 'பூ நாளும் தலை சுமப்ப, புகழ் நாமம் செவி கேட்க, நா நாளும் நவின் றேத்த பெறலாமே நல்வினையே' என்று பறை சாற்றுகிறது. இதில் எந்த அளவுக்கு தெளிந்து சிந்தை யுடன் ஆண்டவனை நினைந்து உள்ளம் உருகுகிறேமோ அந்த அளவுக்கு நமக்கு உயர்வு கிட்டும் என 'வெள் ளத் தனைய மலர் நீட்டம் மாந்தர் தம் உள்ளத்தனையது உயர்வு' என்று வள்ளுவர் பேசுகிறார். இப்பாதையில், உயர்வும், தாழ்வும் நம் உள்ளப் பாங்கை, அதன் முயற்சியை, முதிர்ச் சியை பொறுத்தது என்பது தெளிவு. இப்படி பண்பட்டு நல்லதை நினைக் கும் செயலைத்தான் 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல் லாமல் வேறொன்றறியேன் பரா பரமே' என்று தாயுமானவர் ஒதி யுணர்கிருர். இப்படி, தூயவனை தூமலர்த் தூவி தொழுது மனத் தினுல் சிந்தித்து வாயினுல் பாடிக் களிக்க வேண்டும் என்பது ஆண்டா ளின் திருவாக்கு. அவர் வாக்கு 'வேத மனைத்திற்கும் வித்தாகும்' இப்பரமானந்தத்தை வேறு எங்கும் தேட வேண்டாம் என்னும் மாருத் தன்மை வாய்ந்த, ஏதுமில்லாத ஆனுல் எல்லாம் நிறைந்த, எடுக் கெடுக்க வருகின்ற ஆனுல் எடுத் தாலும் குறையாத அப்பரிபூர்ண குணக்குன்றை 'மற்றிடத்தைத் தேடி யென்றன் வாழ்நாளைப் போக்காமல் உற்றிடத்தைத் தேடி உறங்குவது மெக்காலம்' என பத்திரகிரியார் உருகுகிருர். இதே தூய்மையான சிந்தனையை தாயுமானவர் 'சிந்தித்த தெல்லாம் சிவபூரணமாக வந்தித்து வாழ்த்தி வணங்கு நாள் எந்நாளோ?' என்றும், 'சிந்திக்குந்தோறும் தெவிட்டாத அமுதே என்புந்திக்குள் நீ தான் பொருந்திட அங்காண் பேனே' என்று எண்ணி கண்ணீர் மழை பொழிகிருர். மனத்தூய்மை பெற்று தூயவனைக் கண்டு குணம் என்னும் குன்று ஏறி நின்ருல் உலகத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகள் எல்லாம் சம மாகத் தெரியும். இதைத்தான் சம நோக்கு என்ருர்கள் இது பண்பட்ட பரந்த மனத்திலிருந்துதான் தோன்ற முடியும். ஆகையால்தான் 'புறந் தூய்மை நீரான் அமையும் அகந் தூய்மை வாய்மையால் காணப்படும்' என்ருர் திருவள்ளுவப் பெருந்தகை. இந்த நிலை அடைவது அவ்வளவு எளிதல்ல என்பது ஆன்ருேர் வாக்கு.

இராமகிருஷ்ணர் மனது பிடிவாதம் பிடிக்கும் குழந்தைத் என்கிருர் மடியை விட்டு திரும்ப திரும்ப இறங்கி ஓடும் குழந்தையைத் தாய் மீண்டும் மீண்டும் பிடித்திழுத்து வரு வதுபோல் மனத்தை காக்க வேண் டும். இதை நினைத்துத்தான் தாயு மானவர் 'வாதுக்கு வந் எதிர்த்த மல்லரைப்போல் பாழ்த்த மனம் ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய் பரா பரமே' என்றுக் கேட்டு உருகுகிருர்.

மீண்டும் தாயுமானவர் 'தேடி னேன் திக்கனைத்துந் தெண்டனிட் டேன் சிந்தை நைந்து வாடினேன் என் மயக்கம் மாற்ருய் பராபரமே' என்று பந்தபாச வலையை கிழித்துத் தூய மனதைக் கொடுத்து வேறு எங் கும தேடாமல் உள்ளவனை (உள் இருப்பவனை) உள்ளுக்குள்ளேயே காணும் பேரின்பத்தைக் கொடுக்க வேண்டி அழுகின்ருர்

இந்த ஆத்மானுபவத்தை அவரே பின்னுல் 'சிந்தை பிறந்ததும் ஆங்கே, அந்த சிந்தை இறந்து தெளிந்ததும் ஆங்கே, எந்த நிலைகளும் ஆங்கே, கண்டயான்தான் இரண்டற்று இருந் ததும் ஆங்கே' என்று தான் என்ற நிலை அழிந்து பூர்ணனேடு ஒன்ருக உட்கலந்த அத்வைத அனுபவத்தை பாடிப் பாவிக்கின்ருர். பண்பட்டு பாடிப் பணியாத பக்குவமற்ற மனத்தை மாணிக்கவாசகர் கீழ் கண்ட பாடல் மூலம் படம் பிடித்துக் காட்டுகின்ருர். நம்மையும் பக்குவப் படுத்துகிருர்:

'' ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு
அன்பிலை என்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை
பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணை
யிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறலறிலை
செய்வதொன்றறியேனே'

மனத்தை இந்திரிய சுகமென்ற மதுவுண்ட மயக்கத்திலிருந்து எழுப்பி, தூய நிச்சலமான எண்ணங் களால் நிரப்பி, அதன் மூலம் நல் லவைகளைச் சிந்தித்து, பேசி, பாடிப் பின் ஆண்டவன் அருளுக்குப் பாத்திரமாக நம்மை நாம் தயார் சேய்வோமாக. இந்த நிலையை அடைய அப்பர் கூறிய,

'' காயமே கோயிலாகக் கடிமனம்
அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி
இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர்
அமைய ஆட்டிப்
பூசனை ஈசனர்க்குப் போற்றவிக் காட்டி
னேமே''

என்று வாயினுல் பாடி நம் அலையும் மனத்தை நிலையான ஆண்டவன் பால் திருப்பித் திருந்துவோமாக.



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

*திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.*

*யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப் பட்டுள்ளன.*

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

*இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.*

*128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்*

*8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.*

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

*கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன*

## பயன்கள்

1. *கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.*

2. *நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப் பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.*

3. *குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.*

4. *நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.*

# ★ ★ ஸ்ரீ முஷ்ணம் ★ ★

ைதக் கால் என்னும் கிராமத்தில் ஓர் நவாப் ராஜ பிளவை என்னும் கொடிய நோயால் பீடிக்கப்பட்டுத் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார். வைத்தியரிடம் காட்டியும், வைத்திய முறையில் மூலிகைகளால் குணப் படுத்தவும் வைத்தியர்களாலும் முடியாமல், அவர்களும் தங்களது இயலாமையைத் தெரிவித்து விடவே, நோயைத் தீர்க்கும் வகையறியாது தவித்துக் கொண்டிருந்தார். அவ்வமயம் அவருடைய பாக்கிய வசத்தால் ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீவராஹப் பெருமானின் நினைவு வரவே, ஏற்கனவே ஸ்ரீ வராஹப் பெருமானின் அத்யாச்சர்யமான மஹிமைகளையெல்லாம் கேள்வியுற்றிருந்தாராதலால், ஸ்ரீபூவராஹப் பெருமானைத் தியானித்து, தனக்கு வந்துள்ள கொடிய நோயை நீக்குமாறு ப்ரார்த்தித்தார். எம்பெருமானும் நவாப் இடமான பக்தியோடு வருத்தத்துடன் ப்ரார்த்தித்ததைக் கண்டு, அவருடைய பக்தியை மெச்சி அக்கணமே அவருடைய நோயை தீர்க்க வேணுமென்று திருவுள்ளத்தில் கொண்டார்.

அன்று இரவு நவாப் ஓர் அதிசயமான கனவு கண்டார். அவர் கனவில் எம்பெருமான் ஸ்ரீ வராக ரூபத்துடன் தோன்றி தனது திருக்கைகளால், மிகவும் அன்போடு நவாபின் தலையிலிருந்து உடல் வரை தடவிக் கொடுததுவிட்டு அந்தர்த்தனமாயினர். அக்கணமே நவாபின் ராஜ பிளவை நோய் நீங்கியது. நவாப் உடனே தூக்கம் கலைந்து எழுந்தவுடன் தான் இதுவரை கண்டதெல்லாம் கனவு என்று அறிந்து மிகவும் மனோவியாகூலராய், இருப்பினும் ஸ்ரீ பூவராஹப் பெருமானின் அத்யாச்சர்யமான க்ருபையை எண்ணி எண்ணி மிகவும் பரவ குதூகலமுடையவராய், தனது ராஜ பிளவை நோய் முற்றிலும் நீங்கி விட்டதை உணர்ந்து அளவிடற்கரிய ஆனந்த குதூகலமுடையவராய், பரம பிரீதியுடனே, ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீவராஹப் பெருமானுக்கு நித்ய பூஜைக்கும், மாசி மாத பிரம்மோத்ஸவத்திலும் கிள்ளைக்கு எழுந்தருளுகையில், தன்னுடைய கிராமத்தில் தன்னுடைய அரண்மனைக்கு ஸ்ரீபூவராஹப் பெருமான் எழுந்தருள வேணும் என்றும், அன்றைய தினத்தில் தனது உபயமாக அன்னதானங்கள் நடத்தப் பெற வேணுமென்றும், திட்டம் செய்து மிகுந்த அளவில், நிவந்தங்கள் எழுதி வைத்து, ஒரு சில கிராமங்களையும் அளித்தார்.

பின்னர் நவாப் இறைவனடி சேர்ந்த பின்னர், குல வழக்கப்படி நவாப்பை அடக்கம் செய்து விட்டனர். அன்று முதல் எம்பெருமான் மாசி உத்ஸவத்தில் சமுத்திரத்துக்கு எழுந்தருளும் முன், நவாப் அடக்கம் செய்யப்பட்ட மகுதி வழியாக எழுந்தருளுவதும், மகுதி மேட்டில் மேள தாளங்களுடன் பூஜையை ஏற்றுக் கொள்வதும், நவாப்பின் அரண்மனை வரையில் எழுந்தருளுவதும் ஒரு சிறப்பு

இரண்டாவது பிரம்மோத்ஸவம் சித்திரை மாதத்தில் ஸ்ரீ முஷ்ணத்திலேயே நடைபெறும். ஒன்பது நாட்கள் பகல், இரவு பெருமாள் திருவீதிக்கு எழுந்தருளுகிறார். ஒன்பதாவது நாள் மட்டையடி உத்ஸவம் விசேஷமானது. சித்திரா பௌர்ணமியாகிற அன்று நன்பகலில் நித்ய புஷ்கரிணியில் தீர்த்தவாரி. அன்றைய தினத்தில் மூன்றரைக் கோடி புண்ணிய தீர்த்தங்கள் நித்திய புஷ்கரிணியில் சேருகின்றன.

பிரதி மாதமும் இரண்டு ஏகாதசிகளிலும், பௌர்ணமி, அமாவாஸ்யையிலும், மாதப் பிறப்பிலும் போக நாராயண ஸ்வாமி பிரகாரத்தில் எழுந்தருளுகிறார். வெள்ளிக்கிழமைகளில் தாயாருக்கு டோலோத்ஸவம் உண்டு. அவதார தினமாகிற சித்திரை மாத ரேவதியில் பூவராஹன் எழுந்தருளுகிறார். வைகாசி விசாகம் உத்ஸவர் கருட வாஹனம். ஆடிப் பூரம் ஆண்டாள் உத்ஸவம். ஆவணி பத்து நாள் ஸ்ரீஜயந்தி உத்ஸவமும், உரியடியும். புரட்டாசி பெருமாள், தாயார் நவராத்திரி கொலு, ஐப்பசியில் தீபாவளி உத்ஸவம். கார்த்திகை திருக்கார்த்திகை சொக்கப்பானை. மார்கழி பகல் பத்து அத்யயனோத்ஸவமும், இராப்பத்து ஆண்டாள் நீராட்டு. வைகுண்ட ஏகாதசி அன்று ஸ்ரீயக்ஞவராகனுக்கும், ஆண்டாளுக்கும் திருக்கல்யாண உத்ஸவம் மிகவும் விசேஷமானது. கனுமாட்டுப் பொங்கல் அன்று பாரிவேட்டை. தைப் பூசத்தன்று எம்பெருமான் குணமங்கலம் எழுந்தருளி வெள்ளாற்றில் தீர்த்தவாரி உத்ஸவம் கண்டருளுவார். பங்குனி மாதத்தில், உத்திரத்தன்று, பெருமாள், தாயார் திருக்கல்யாண சேர்த்தி உத்ஸவமும், மறுநாள் பூண்டி என்கிற கிராமத்திற்கு எழுந்தருளி வெள்ளாற்றில் தீர்த்தவாரி கண்டருளி தீர்த்தம் சாதிப்பதும், அன்று நடைபெறும் திரு ஊரல் உத்ஸவமும் மிகவும் விசேஷமானவை. அக்ஷய திருதியை அன்று எம்பெருமான் தங்க கருட வாகனத்தில் எழுந்தருளுவார்.

திரு. கோ. க. வா. கோவிந்தராஜ
பாவனுசார்யா ஸ்வாமி.
ஸ்ரீரங்கம்.

ஸ்ரீ யக்ஞவராக மூர்த்தி ஸ்ரீதேவி, பூதேவிகளுடன், ஸ்ரீஅம்புஜவல்லித் தாயாருடன் திருமஞ்சனம் கண்டருளும் அழகைக் கண்டு அனுபவிக்க இரண்டு கண்கள் போதாது: திருமஞ்சனத்திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானின் அப்ராக்ருதமான திவ்விய சௌந்தர்ய வடிவழகையும், திருமஞ்சனம் கண்டருளும் அழகையும், அனுபவித்துப் பயன்பெற வேண்டுமே தவிர எழுத்தினால் வடிக்க இயலாது.

ஸ்ரீ வராஹமூர்த்தி உபாசனா மூர்த்தியாவார். தியானிப்பவர்கள், ஸ்ரீயக்ஞ வராஹராகவோ, அல்லது ஸ்வேத வராஹராகவோ, அல்லது பிரளய வராஹராகவோ அல்லது ஸ்ரீ பூவராஹராகவோ தியானிக்கலாம். வராஹ உபாசனை மிகவும் தீவிரம் வாய்ந்தது. நேர்மை, சத்தியம், தர்மம், உண்மை, தயை போன்ற நற்குணங்களை உடையவர்களுக்கு வராஹ உபாசனை மிகவும் எளிதில் பயன் தரும். எல்லா திவ்வியாலயங்களுக்கும் ஸ்ரீ வராஹ மூர்த்தியே க்ஷேத்திராதிபதியாவார்.

மஹா வராஹோபநிஷத்திலும், ஸ்காந்த புராணத்தில், சிவ, பார்வதி சம்வாத ரூபமாகவும், ஸ்ரீ வராக புராணத்தில், பிராட்டிக்கு பெருமானே, உபதேசித்த ஸ்ரீவராஹ மந்திரம் ஸ்ரீவராஹ உபாசகர்களாலும், சித்த தவ யோக புருஷர்களாலும், உத்தாரணம் செய்யப்படுகிறது. ஸ்ரீ வராஹ மந்திரம் எல்லா வல்வினைகளையும் நீக்கி, க்ஷேமங்களை அளிக்க வல்லது. உபாசனை செய்பவர்களுக்கு அனுக்ரஹ மூர்த்தி ஸ்ரீவராஹமூர்த்தி ஒருவரே. ஸ்ரீவராஹ மந்திரம் மிகவும் ரஹஸ்யமானது. ஸ்ரீ வராஹ உபாசகர்களிடம் ஒரு போதும் போலி மந்திர வாதியால் இழைக்கப்படும் பில்லி, சூனியங்கள் இவைகள் உள்ளிட்ட கொடிய வல்வினைகள் அண்டாது. ஸ்ரீவராஹ மந்திரோச்சாடனத்தை கேட்ட மாத்திரத்தில் அவ்வல்வினைகள் தீயினில் தூசாகி, சூரியனைக் கண்ட பனிபோல் விலகி விடும்.

ஸ்ரீவராஹ மந்திரத்துக்கு அதிதேவதை ஸ்ரீ முஷ்ணத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீபூவராஹமூர்த்தியே யாவார். ஸ்ரீவராஹ மந்திரத்தை குரு முகமாக லபித்து, ஸ்ரீமுஷ்ணத்தில் நித்திய புஷ்கரிணியில் நீராடி, ஸ்ரீபூவராஹமூர்த்தியை சேவித்து, ஏகாக்கிர சித்தனாய், [வெண்மையான திருவுருவோடு, நான்கு கைகளோடும் கூடியவராய், இரு கைகளில் சங்கு, சக்கரம் ஏந்தியும், அபய கதாஹஸ்தங்களுடன் கௌஸ்துப மணியுடன், திருமுக மண்டலத்தில் மந்தஹாசப் புன்னகை தவழ, ஸ்ரீதேவி, பூதேவி சஹிதமாக, ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திர நாதனை, ஸ்ரீயக்ஞ வராஹமூர்த்தியை] ஹிருதயத்தில் தியானித்தும், அந்த திருவுருவை மனதில் இருத்தி அசுவத்த மரத்தினடியில் அமர்ந்து, பத்மாஸனத்தில் வீற்றிருந்து, கண்கள் பார்வை இரண்டையும் ஒரு முகமாக மூக்கு நுனியில் செலுத்தி, ஸ்ரீ வராஹ மந்திரத்தை ஒரு லக்ஷம் ஆவ்ருத்தி ஜபம் செய்ய வேண்டும். அதில் பத்தாயிரம் ஆவ்ருத்தி ஹோமத்திலும், அதில் ஆயிரம் ஆவ்ருத்தி தீர்த்தத்தினாலும், பஞ்ச கவ்யத்தினாலும், தர்ப்பணமும், அதில் நூறு ஆவ்ருத்தி மார்ஜனமும், அதில் பத்து பூத திருப்தியும் செய்து ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரத்தில் அன்னதானம் செய்வித்து, ஸ்ரீ பூவராஹ மூர்த்தியை சேவித்து பூர்த்தி செய்கிறவர்கள் பால் ஸ்ரீ பூவராஹப் பெருமான் மிகவும் அபிமானித்து, பூமண்டலாதிபத்தியத்தை அவனுக்குக் கொடுக்கிறார். அவனைப் போல மஹா பாக்கியவான்களே லோகத்தில் கிடையாது. அஷ்டைஸ்வர்யாதிகளும் தாமே வந்தடையும். மிகுந்த ஞானவானாக விளங்கி, ஐஹிக ஆமுஷ்மிக பலன்களையெல்லாம் பெற்று, முடிவில் சாசுவதமான ஹரி சாயுஜ்யமான பரம பதத்தையும் அடைகிறான். விருஷாத ராமன் என்னும் பக்தர் ஸ்ரீ வராஹ மந்திரத்தை நித்திய புஷ்கரிணிக் கரையில், அசுவத்த மரத்தடியில் ஜபித்தார். அவருடைய தவத்துக்கு மெச்சிய ஸ்ரீவராஹப் பெருமான் தன்னுடைய சக்கரத்தையும், சங்கையும் அவருக்கு அளித்தார். முடிவில் மோக்ஷத்தையும் நல்கினார்.

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் மஹா சுதர்சன மூர்த்தியின் யந்திரங்களை விவரிக்கையில், மாஹேந்திர மண்டல மென்றொரு யந்திர ஸந்நிவேசம் சொல்லப்பட்டுள்ளது. அந்த விசேஷமான யந்திரத்தில் கீழ்பாகத்தில் ஸ்ரீ வராஹ மூர்த்தியையும், ஊர்த்வ பாகத்திலே ஸ்ரீநரசிம்ஹ மூர்த்தியையும் த்யானிக்க வேணுமென்று விதித்திருக்கிறது. இதையே கூரநாராயண ஜீயரும் ஸ்ரீசுதர்சன சதகத்தில், 'தம்ஷ்ட்ராகாந்த்யா கடாரே கபட கிடிதநோ: கைடபாரே ரதஸ்தாத்' என்கிற சுலோகத்தில், ''கீழ் பாகத்தில் கபட வராஹமூர்த்தியான எம்பெருமானுடைய தந்த காந்தியினாலும், மேல் பாகத்தில் நரசிம்ஹ மூர்த்தியினுடைய சிரிப்பினாலும் ஸம்பந்திக்கப் பெற்றதாய் கபில வர்ணமான மாஹேந்திர மண்டலத்திலே விளங்குகிற திருவாழி ஆழ்வான்'' என்று அருளிச் செய்துள்ளார். எனவே ஸ்ரீமஹா சுதர்சன யந்திரத்துக்கும் சான்னித்தியத்தை நல்கி, யந்திரத்திலும் தியானிக்கத் தக்க மூர்த்தி ஸ்ரீவராஹமூர்த்தியே யாவார்.

ஸாளக்ராமத்தில் ஸ்ரீவராஹமூர்த்தியின் லக்ஷணங்களை வெகு அழகாக விவரிக்கிறது ப்ரஹ்மாண்ட புராணம். க்ருஹத்தில் திருவாராதனத்திற்கு ஸ்ரீவராஹமூர்த்தியை லபித்து, ஆராதித்தால் அந்த க்ருஹத்தில் மிகுந்த லக்ஷ்மீ கடாக்ஷம் உண்டாகும். அந்த க்ருஹம் பரம பாவனமாகும். அந்த கிருகத்தில் ஸர்வ தீர்த்த பிரபாவங்கள் உண்டாகின்றன. ஸ்ரீ வராஹ மூர்த்தியை ஆராதிப்பவனுக்கு மிகுந்த ஞானமும், செல்வாக்கும், செல்வமும், பகவத் கடாக்ஷங்களும் உண்டாகும். அஷ்டைஸ்வர்யங்களும்

உண்டாகும். எம்பெருமானை ஆராதிப்பவர்களுக்கு சாசுவதமான பரம பதமும் கிட்டும்.

நீண்ட துவாரமும், பளபளப்பான வடிவமும், துவாரத்தின் நடுவில் இரண்டு சக்கரங்களும் பூச்சாம்பூ போன்ற கோடுகளும், குளிர்ந்த நீல வர்ணமாகவும் உள்ள ஸாள க்ராமம் ஸ்ரீலக்ஷ்மீ வராஹ மூர்த்தியாவார். அடிப்பக்கத்தில் ஒரு சக்கரமும், அதன் சமீபத்தில் ஒரு தெத்துப் பல்லும், உயரமாகவும், அங்குச வடிவத்துடனும் இருப்பது ஸ்ரீபூவராஹ மூர்த்தியாகும்.

ஸாள க்ராமங்களில் ஸ்ரீவராஹ மூர்த்தியின் பல்வேறு வகையான தியான மூர்த்திகளின் லக்ஷணங்களை, பல படி விஸ்தாரமாக புராணங்கள் கூறுகின்றன. ஸ்ரீவராஹ மூர்த்தி ஸாள க்ராமங்கள் கிடைப்பது என்பது மிகுந்த பகவத் கடாக்ஷமும், பூர்வ ஜன்ம சுகிர்தமும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஸ்ரீ வராஹ ஸ்ரீமூர்த்தியை லபித்தல் என்பது சாத்தியமாகும்.

ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரத்தில் நித்திய புஷ்கரிணியில் நீராடி, நித்திய புஷ்கரிணிக் கரையில் தர்ப்பணம் செய்து, ஸ்ரீ பூவராஹனை சேவிப்பவன், அவனுடைய மூதாதையர்களை கடைத்தேற்றியவனாவான். பித்ருக்கள் கரையேறியவர்களாய் மோக்ஷ லோகத்திற்குச் செல்கிறார்கள். ஸ்ரீ முஷ்ண க்ஷேத்திரத்தில் சம்பரன் என்றொரு ஏழைப் பிராமணன் வசித்து வந்தான். அவன் தினமும் பக்கத்து கிராமத்துக்குச் சென்று யாசகம் எடுத்து வருகையில், ஸ்ரீ முஷ்ண க்ஷேத்திரத்தில் அன்ன தானம் செய்துவிட்டுத்தான், தான் உண்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தான். சம்பரனை சோதிக்க எண்ணிய ஸ்ரீ வராஹ மூர்த்தியானவர், 'ஒரு கிழவர் வேடம் தரித்து தன் கூடவே சிங்கத்தையும் அழைத்துக் கொண்டு சம்பரனின் இல்லத்திற்கு வந்து "பசிக்கிறது சாப்பாடு கொண்டா" என்று கூறினார். சம்பரனும் விருந்தாளியாக வந்த பிராம்மண கிழவரை உபசரித்து உணவு அளித்தார். இதுவும் போதாது என்றும் இன்னமும் வேணுமென்று கேட்டார் கிழவர். . சம்பரனும் வீட்டிலிருந்த அனைத்துப் பொருளையும் திரட்டி விற்று அன்னமிட்டார். பசியுடன் இருந்த சிம்மமோ, ஹோமத்திற்காக பால் வேணுமென்று சம்பரன் வளர்ந்து வந்த பசுவின் மீது வின் மீது பாய விருந்தது. சம்பரனோ பசுவிற்குப் பதிலாக தன்னையே தர இசைந்தார். அதிதியாக வந்த கிழவரோ, இந்த சிம்மமானது மூன்று மனிதர்கள் வரை தின்னக் கூடியது. எனவே ஒரு மனித மாமிசம் போதாது என்றார். உடனே சம்பரனும் 'அப்படியானால் எனது மனைவியையும், மகனையும் தருகிறேன். என்னோடு சேர்த்து இந்த சிம்மம் உண்ணட்டும்' என்றார். உடனே அதிதியாக வந்த பகவான், சம்பரனின் விருந்தோம்பலில் இருந்த பக்தி திறத்தை மிகவும் வியந்து போற்றி, திவ்விய பீதாம்பரதாரியாய் ஸ்ரீயக்ஞ வராஹ மூர்த்தியாக சேவை சாதித்தார். வேண்டியதை கேட்கும்படி பணித்தார். சம்பரனும் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக எம்பெருமானை வணங்கி 'ஜிதந்தே' ஸ்தோத்திரத்தால் துதித்து, எனக்கு உம்முடைய திருவடி மறவாமலிருக்கவும் மேற்கொண்டு அன்னதானங்கள் நடத்த திரவியமும், முடிவில் மோக்ஷமும் வேணும் என்று கேட்க, எம்பெருமானும் சகல மங்களங்களும் அருளி அந்தர்த்தனமாயினார். சம்பரனும் ஸௌக்கியமாக வாழ்ந்து எம்பெருமானை சேவித்துக் கொண்டு தினமும் அன்னதானம் விசேஷமாகச் செய்து, முடிவில் மோக்ஷத்தையும் எய்தினான். ஸ்ரீ முஷ்ணத்தில் அன்னதானம் செய்விப்பவர்கள் சகல சௌபாக்கியங்களையும் பெற்று ஹரி சாயுஜ்யத்தைப் பெறுவர். முன்பொரு காலத்தில் பஹுப்பிரஸ்தன் என்ற வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் உழவுத் தொழிலிலும், வியாபாரத்திலும் பெரும் பொருளை ஈட்டி விட்டான். தன் சுக போகத்திற்கோ, தன் மனைவிக்கோ, குழந்தைகளுக்கோ தர்மத்திற்கோ எதற்கும் பொருளைச் செலவு செய்ய மாட்டான். மிகவும் லோபியாக வாழ்ந்து வந்தவனுக்கு, பாக்கிய வசத்தால் பத்ம பந்து என்ற மகானுடைய ஸ்நேகம் கிடைத்தது. அந்த மகானுடைய உறவாலும், அவ்வப்போது அவர் கூறும் புத்திமதியாலும் பஹுப்பிரஸ்தனது மனம் சிறிது, சிறிதாக திருந்த ஆரம்பித்தது. தர்மங்களின் மகத்துவங்களையும், பலவித தர்மங்களையும் அறிந்து இதுகாறும் காலத்தை வீணாக்கினமையை உணர்ந்து வருந்தி, ஸ்ரீ முஷ்ணத்தின் மஹிமைகளை உணர்ந்து, தன் மனைவி, குழந்தைகளோடு ஸ்ரீமுஷ்ணம் சென்று நித்திய புஷ்கரிணியில் நீராடி, ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திர நாதனை ஸ்ரீ பூவராஹப் பெருமானைச் சேவித்தான். எம்பெருமான் கோயிலில் நெய் விளக்கு ஏற்றினான். இவ்வாறே தினமும் சேவை செய்து வந்தான். எம்பெருமானுக்கு ரதோத்ஸவம் செய்து வைத்து மகிழ்ந்தான். ஸ்ரீ வராஹ மூர்த்தியின் அருளுக்குப் பாத்திரனாகி, உலகத்தின் ஏக சக்ராதிபதியாகப் பல்லாண்டு, பல்லாண்டு ஆட்சி புரிந்து ஹரி சாயுஜ்யம் அடைந்தான். ஸ்ரீ முஷ்ணம் என்கிற சொல்லை நினைப்பவர்களும், நித்திய புஷ்கரிணியில் நீராடி ஸ்ரீவராஹ மூர்த்தியை சேவிப்பவர்களும், துன்பங்கள் நீங்கி எம்பெருமானின் கடாக்ஷ லப்த ஸம்பன்னர்களாவார்கள்.

ஆத்மாவுக்கும் ஆத்மாவான பரமாத்மாவிடம் எல்லையற்ற பிரீதி வைத்து, இத்தகைய ப்ரீதிக்குரிய, இக்ஷ்வாகு குலதனமும், தெய்வமுமான திருவரங்கநாதனையே ஸ்ரீராமனிடம் பெறும் பேறு பெற்ற ஸ்ரீவிபீஷணாழ்வான் போன்று, 'நம்மைக் காத்துக் கொள்வதற்கு நம்மாலாகாது. எம்பெருமானே உபாயம்.' என்கிற திடமான அத்யவஸாயமே ஒவ்வொருவர்க்கும் தஞ்சம்.

ஸ்ரீமந் நாராயணன் ஜனங்களின் பாபங்களையெல்லாம் போக்கிக் கொண்டு, "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்று தன்னைக் காட்டி இப்பூவுலகில் வசிக்கிறான் என்பது தனக்காக இல்லை, தீபம் போன்று உலக நன்மையின் பொருட்டே.

முற்றும்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்):

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்:

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி;

8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்.

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கானஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வது மணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு 7-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு 10-00 வரை : ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்:

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன,

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

# ஒரு ஜாதி-ஒரு மதம்-ஒரு தெய்வம்

பாரத நாட்டின் வரலாற்றை ஆராயும் பொழுது காலங்காலமாக இங்கு வாழ்ந்த மக்களிடையேயிருந்த அறியாமையினால் உண்டான மூட நம்பிக்கைகளை ஒழிப்பதற்காக பல சான்றோரும் பெரு முயற்சிகளை மேற்கொண்டிருந்தார்கள் என்பது தெரிய வரும். புத்தர் முதல் காந்தியடிகள் வரை பலரும் இந்தச் சமூகக் கொடுமைக்கு எதிராக குரலெழுப்பிக் கொண்டேயிருந்தார்கள் என்பதை வரலாறு நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது. சாதி வெறி, தீண்டாமை போன்ற அநீதிகள் இந்த நாட்டிலே வரலாற்றுக் கெட்டாத காலம் முதல் இருந்து வந்ததை அறியும் பொழுது தான் இந்தச் சமூகக் கொடுமைகள் எத்தனை பெரிய தீங்கினை இந்நாட்டிற்கு இழைத்திருக்கிறது என்பதும் நமக்குப் புலப்படுகின்றன. இந்தக்கொடுமைகளை அகற்றவும், மூட நம்பிக்கைகளை நீக்கவும் பாடுபட்ட பெரியோர் வரிசையில் கேரளத்தைச் சேர்ந்த ஸ்ரீ நாராயண குருவும் ஒருவராவர். அவர்து வாழ்க்கையையும், அவராற்றிய அருந்தொண்டினையும் அறிந்து கொள்வது நமது ஒவ்வொருவருடைய கடமையுமாகும்.

ஸ்ரீ நாராயண குரு அவர்கள் கேரள மாநிலத்தில் திருவனந்தபுரத்தையடுத்த செம்பழந்தி என்ற கிராமத்தில் 1854 ஆம் ஆகஸ்ட் 26 ஆம் நாள் சதய நட்சத்திரத்தில் மாடனாசான் - குட்டியம்மாள் தம்பதியினருக்கு மகவாகப் பிறந்தார். இளமையிலேயே மலையாளம், தமிழ், சமஸ்கிருதம் போன்ற மொழிகளைப் பயின்றதோடு ஆயுர்வேதச் சிகிச்சை முறைகளையும் கற்றார்.

அக்காலத்தில் கேரளத்தில் உயர் ஜாதியினர் என்று தங்களைக் கூறிக் கொண்டவர்கள் தாழ்ந்த ஜாதியினராக முத்திரை குத்தப்பட்டவர்களை மிகவும் கீழ்த்தரமாக நடத்தி வந்தனர். உயர் ஜாதியினர் நடக்கும் சாலைகளில் கீழ் ஜாதியினர் நடப்பதற்குக் கூட தடை விதிக்கப்பட்டிருந்தது. சிலஜாதியினரைத்தொடக் கூடாதவர்களென்றும், சிலரைப் பார்த்தாலே குளிக்க வேண்டுமென்றும் கருதி வந்தனர். ஒரு முறை கேரளத்துக்கு வருகை தந்து இந்தக் கொடுமைகளைக் கேட்டறிந்த சுவாமி விவேகானந்தர் கேரளம் பித்தர்களின் பாசறை என்று கூடக் குறிப்பிட்டார்கள். அந்த அளவுக்கு ஜாதி வெறி எங்கும் தலைவிரித்தாடியது.

ஸ்ரீ நாராயண குரு தனது வாலிபப் பருவம் முதலே உலகப் பற்றற்றவராய் விளங்கினார். எல்லா ஜாதியினரிடமும் ஒரே மாதிரி அன்பு காட்டினார். துன்பமுற்றவர்களின் இன்னலைப் புரிந்து கொண்டு அவர்களுக்குத் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்தார். இதனால் சிலருடைய வெறுப்புக்கும் ஆளானார்.

லௌகிக பந்தங்களிலிருந்து விடுதலையடையும் பொருட்டு அவர் செம்பழந்தி கிராமத்தைவிட்டுக் கால் நடையாக ஊர் ஊராகச் சென்றார். பல இடங்களுக்கும் சென்று பல மதங்களைச் சேர்ந்த பெரியார்களுடன் மதக் கோட்பாடு, இறை தத்துவம் முதலியவற்றை விவாதித்தார். பின்னர் கன்னியாகுமரியை அடுத்த மருத்துவாமலை என்ற இடத்திலுள்ள ஒரு குன்றில் பல ஆண்டுகள் தவம் இருந்தார். பின்னர் ஞானம் பெற்றுத் திருவனந்தபுரத்தையடுத்த அருவிப்புரம் என்ற ஊரில் தங்கியிருந்து தான் கண்ட உண்மைகளை மக்களுக்கு உபதேசம செய்யத் தொடங்கினார்.

"எல்லா மதங்களும் ஒரே உண்மையைத்தான் உணர்த்துகின்றன. இதையறியாமல் விவாதம் செய்வோர் யானையைக் காணச் சென்ற குருடர்களுக்கு யானையின் உண்மையான உருவ அமைப்பு விளங்காததுபோல் மதவெறியர்கள் தாம் சார்ந்திருக்கும் மதத்தின் உண்மைகளை உணர முடியாதர்களாகவே இருப்பார்கள். தரும நெறியைக் கடைபிடித்து ஒழுகும் ஒருவன் அந்தத் தருமத்தை உலகில் நிலைநாட்ட பிற மதத்துக்குச் செல்ல வேண்டிய தேவையில்லை. ஏனென்றால் எல்லா மதங்களும் உணர்த்தும் உண்மை ஒன்றே."

திரு. கி. அரங்கசாமி எம் ஏ.,
பட்டாம்பி.

"அவனவனுடைய நன்மைக்காகச் செய்யும் ஒவ்வொரு செய்கையும் பிறருக்கு இன்பம் பயப்பதாய் இருக்க வேண்டும். நமது செய்கைகள் ஒவ்வொன்றும் பிறருடைய நலத்தையும் பேணுவதாய் இருக்க வேண்டும். மதங்களுக்கிடையே உயர்வு தாழ்வு என்பது இல்லை; மதம் எதுவானாலும் மனிதர்கள் மேன்மையடைந்தால் போதும்."

தன்னுடைய போதனைகளைப் பரப்பவும், சாதி மத வேற்றுமைகளை வேரறுக்கவும் 1903ல் 'ஸ்ரீநாராயண தர்ம பரிபாலன யோகம்' என்ற இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

காலங்காலமாக அடிமைப்பட்டுக் கிடந்தவர்களுக்கு அவருடைய போதனைகள் ஆறுதலையளிப்பதாக இருந்தது. சாதி வெறியில் திளைத்துக் கொண்டிருநத மூட சமூகத்தின் அறிவுக் கண்ணைத் திறப்பதாகவும் அவருடைய போதனைகள் அமைந்திருந்தன. ஒரு ஜாதி, ஒரு மதம், ஒரு தெய்வம் என்ற தத்துவத்தை

# திருமாலை உணரும் ஞானம்

**கவிஞர் வேதம்**

ஞானம் தேட வாருமென்றே
நான்தான் இங்கே அழைத்துநின்றால்,
தேன்தான் ஞானம் எனமதித்தே
சேர்வோர் யார்யார்? தமிழகத்தில்?
காலை எழுந்தால் பேப்பரிலே
கழுத்தை வெட்டும் கொள்ளையர்கள்
வேலை எங்கே நடத்தி நின்றார்?—
என்ற ஞானம் விரும்புகின்றார்!

என்றோ பெற்ற 'லாட்டரி'யில்
எனக்கே லட்சம் விழுந்துளதா?
என்றே துடிக்கும் ஞானமன்றோ
இலக்காய், பற்றாய் உள்ளதிங்கே!
அறிவில் கதிரோன் போல்ஒளிர்ந்தும்,
அனைத்துக் குணமும் பெற்றிருந்தும்,
''திருமால்'' மேலே அன்புஇன்றேல்
தெய்வ ஞானம் வந்திடுமா?

ஞானம் என்றால் எதைச் சொன்னார்?
ஞானம் வாழ்வில் ஏன்தேவை?
ஞானம் பெறவே வழிஎன்ன?
நாமே தெரிந்து கொள்வோமா?
பகுத்த அறிவே மெய்ஞ்ஞானம்;
மற்ற ஞானம் பகுத்தறிவா?
பகல்வே டங்கள் ஞானமல்ல;
'பழுக்காச்' சொல்லும் ஞானமன்று!

அகந்தை என்னும் நான்நீக்கி,
ஆழ்வார் பாடல் அகம்தேக்கி,
அகழ்ந்த மோனத் தவமிருந்தால்,
யார்க்கும் இங்கே ஞானம்வரும்!
திருமால் அருளே நம்முனைப்பாய்,
திருமால் அன்பே ஓர்நினைப்பாய்,
பெருமை கொண்ட 'அவன்' அழகின்
'பிம்பத்' துளியே நாமென்று,

அகத்தில் உணர்ந்தே அவன்பேச்சை
ஆழ்ந்து கேட்டால் 'அது' ஞானம்!!
அகம்அ துவரை அஞ்ஞானம்!
அசத்தும் மாயைத் திரைஊனம்!
இறக்கும் வரைக்கும் வீண்ஏனம்!
ஏன்வேண் டுமிந்த அவமானம்?
திருமால் மேலே பக்திகொண்டே
தேர்வீர் இன்றே பெரும்ஞானம்!

அப்போ தறிவீர் உம்உடம்பின்
அங்கம் எல்லாம் பெரும்வானம்!
தப்பா(து) அடையும் இந்த சொத்தை
தட்டிக் கழித்தல் அறிவீனம்!!
இமயம் உள்ள சிறுபொந்தில்
இழையும் சுத்த வெள்ளகங்கை!
இமயப் பொந்தே தூயமனம்!
எழுவீர்! அடைவீர்! விஷ்ணுவனம்!!

அவர் நாடெங்கும் பரப்பினார். அத்துடன் பக்தி ரசம் ததும்பும் அநேக நூல்களையும் வெளியிட்டார்.

வர்க்கலை என்ற இடத்தில் 1904ம் ஆண்டு அவர் சர்வமத சம்மேளத்தினைக் கூட்டினார். பின்னர் அங்கு ஒரு பள்ளியை நிறுவி அங்கு எல்லா மதத்தத்துவங்களையும் கற்பிப்பதற்கு ஏற்பாடு செய்தார். ஜாதிப்பேயை ஓட்டுவதற்கும், மூட நம்பிக்கைகளை அகற்றுவதற்கும் மிகவும் போராடினார்.

சமுதாயச் சீர்கேடுகளை அகற்றும் ஞான சூரியனாகத் திகழ்ந்த அவரைக் காணவும், அவரது பொன்னுரைகளைக் கேட்கவும வெள்ளம் போல் மக்கள் கூடினார்கள். மூட நம்பிக்கைகளை அகற்றுவதற்கென்றே மண்ணில் அவதரித்தவர் என்று அவரை மக்கள் போற்றினார்கள்.

அருவிப்புரம் என்ற இடத்திலிருந்த சுப்ரமணியர் கோவிலைப் புதுப்பித்தார். அங்கு ஒரு சிவன் கோவிலையும் கட்டினார். பின்னர் 1907ல் கண்ணனூரில் சுந்தரேஸ்வரர் கோவிலையும், 1908ல் தலைச்சேரி ஜகந்நாதர் கோவிலையும், 1910ல் கோழிக் கோட்டில் ஸ்ரீகண்டேஸ்வரர் கோவிலையும் கட்டினார். 1912ல் சிவகிரி என்ற இடத்தில் சாரதா மடத்தையும், ஆறு வாயில் அத்வைதாஸ்ரமத்தையும் நிறுவினார். இவரது அறிவுரைகளைக் கேட்டு ஆயிரக் கணக்கான மக்கள் இவர் தோற்றுவித்த இயக்கங்களில் சேர்ந்தார்கள்.

இப்படியாக கேரள சமுதாய வாழ்க்கையில் மாபெரும் மாற்றங்களைத் தோற்றுவித்து மக்களை அறியாமையிலிருந்தும், மூட நம்பிக்கைகளிலிருந்தும் விடுதலையடையச் செய்ய அரும்பாடுபட்ட அப்பெரியார் 1928ம் ஆண்டு 28ந்தேதி இம் மண்ணுலக வாழ்வை நீத்தார்.

卐

# குரு பரம்பரை மகிமை

திருவளரும் வைகுந்தத்தில் ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருந்து நித்திய சூரிகளுக்கு எப்போதும் பேரின்பத்தை நல்கி வருகின்றார். பரலோக வாசிகளுக்குக் கிடைக்கும் முத்தியின்பம் இகலோக வாசிகளுக்கு இல்லாமல் போகிறதே என்று இறைவன் எண்ணினார். எனவே, நிலவுலகில் வாழ்பவர்கட்குத் தநுகரண புவன போக பாக்கியங்களால் பேரின்பம் கிடைக்கத் திருவுளங்கொண்டார். ஆனால், பூவுலகில் வாழும் ஆன்மாக்களோ, தங்களுக்கு அளிக்கப்பட்ட தநுகரண புவனபோக பாக்கியங்களைக் கொண்டு உலக இன்பமான சிற்றின்பத்தையே அனுபவிக்கத் தொடங்கினர்; நிலவுலகில் வாழும் மக்கள் அழிவில்லாதவீட்டுப்பேற்றை அடைய வேண்டும் என்ற ஆண்டவனின் எண்ணத்துக்கு மாறாக மக்கள் நடக்கத் தொடங்கினர்.

தநுகரண புவனங்களால் பயனில்லாது போகவே, மக்கட்குப் பகுத்தறிவை அளித்து ஆண்டவன் அருள் புரிந்தார். தன் கட்டளைச் சொற்களாக வேதங்களை வெளிப்படுத்தினார். வேதங்கள் அரியவை; பெரியவை. எனவே, ரிஷிகள் ஞானிகள் போன்றோர்க்கே வேதத்தின் உட்பொருள் விளங்கியது. சாமானிய மக்களால் வேதங்களை ஓதி உய்வுபெற இயலவில்லை. நம் போன்றோரும் வேதங்களை உணர்ந்து கொள்ளும் பொருட்டு ரிஷிகள் வாயிலாக வேதங்களின் உட்பொருளை வெளியிடலானார் வைகுந்தவாசன்.

வேத சாஸ்திரங்கள் மக்களின் அகவிருளைப் போக்க வல்லவை. ரிஷிகள் வாயிலாக வெளிப்பட்ட வேத விழுப்பொருளும் மக்களுக்கிருந்த அஞ்ஞானத்தால் விளங்கவில்லை; எனவே, அஞ்ஞானத்தை அகற்றவும் நெஞ்சக் கோயிலில் ஞான விளக்கேற்றவும் பக்தி நெறியைப் பரந்தாமன் பரிந்து உதவினார். அப்பக்தி நெறியைப் பற்றிக் கொள்ளும் சக்தியும் பாமர மக்களுக்கு இல்லாமல் போய்விட்டது. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களால் மக்கள் அல்லலுற்றனர். எனவே, மக்களின் மலங்களை அகற்ற அமலன் திருவுளங் கொண்டார்.

நிலவுலக ஆன்மாக்களும் பேரின்பத்தை அடைய வேண்டும் என்பதில் நிமலனான நாரணனுக்கு நிறைந்த நாட்டம் ஏற்பட்டது. பக்தி நெறியைப் பாமரர்க்குணர்த்தத் திருமால் தானே எளிவந்த நிலைக்கு இரங்கி வந்தார். ஆச்சார்ய வடிவங்கொண்டு உயிர்களுக்கு உபதேசம் செய்யத் தொடங்கினார். எனவே, உலகின் முதல் ஆச்சார்யன் ஆண்டவனே என்பது வெளிப்படை. இது ஆண்டவனின் சௌலப்பிய குணத்தை அழகுறக் காட்ட எழுந்ததாகும்.

குரு-சிஷ்ய உறவு எப்படி அமைய வேண்டும் என்பதை உணர்த்தத் திருமால் தானே முன் மாதிரியாகத் திகழ்ந்தார். நாரணன் என்ற பெயரில் குருவாகவும், நரன் என்ற பெயரில் சீடனாகவும் இருந்து பதரிகாசிரமத்தில் குரு சிஷ்ய உறவை நர நாரணனாக இருந்து தாமே உபதேசித்தருளினார்.

திருமாலே கிருஷ்ணாவதாரத்தில் பார்த்தனுக்குச் சாரதியாய் அமர்ந்து கீதோபதேசம் செய்தருளினார். கல்லால மரத்தின்கீழ் அமர்ந்து தட்சணாமூர்த்தி கோலம் கொண்டு சனகாதி முனிவர் நால்வர்க்கும் வேதோபதேசம் செய்த சிவபெருமானும் நாராயணனே ஆவர். முருகப் பெருமானாய் அவதரித்து முக்கண்ணனுக்கும், அகத்தியர் அருணகிரி முதலானோர்க்கும் பிரணவ மந்திரத்தின் உட்பொருளை உபதேசித்தவரும் அப்பரந்தாமனே!

இவ்வாறு பரப்பிரம்மமே பல்வேறு காலங்களில், பல்வேறு வடிவங்களில் ஆச்சார்யனாய்-குருவாய் எழுந்தருளியிருந்து நல்லுபதேசம் செய்த வரலாற்றை அறிந்து மகிழ்வெய்துகிறோம். இதனால் ஆண்டவனே ஆச்சார்யனான முறைமை தெளிவாகத் தெரிகிறது.

இதன் பின்னர், திருமால் ஆச்சார்யர்கள்—ஆழ்வார்கள் எனப்பல வடிவங்களில் எழுந்தருளி வேதப் பொருளை நமக்கு உணர்த்தி வருகிறார். ஆச்சார்ய பரம்பரை—அதாவது குரு பரம்பரை நாராயணனையே முதலாகக் கொண்டு இன்று வரை வளர்ந்து வரும் அற்புதத்தைக் கண்டு மகிழ்கிறோம். ஆண்டவனையே ஆச்சார்யனாகக் கொண்ட ஒரே சமயம் இந்து சமயமே என்பதை அறிந்து நாம் பெரு மகிழ்ச்சி கொள்ளலாம்.

---

**மாருதிதாசன்,**
*காஞ்சிபுரம்.*

---

பரப்பிரம்மமே முதல் ஆச்சார்யர் பரம்பொருளே ஆதிசங்கரர் எனும் பெயர் கொண்டும், வேத வியாசர் எனும் பெயர் கொண்டும் ஆச்சார்ய பரம்பரையை நிலை நாட்டி வரும் உண்மையை வரலாறு நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. எனவே ஆச்சார்யனே ஆண்டவன்—ஆண்டவனே ஆச்சார்யன் என்பதை உணர முடிகிறது.

ஆச்சார்யர், குரு, உபாத்யாயர், ஆசிரியர் முதலான சொற்கள் பலவும் ஒரு பொருளைக் குறிக்க எழுந்தனவே!

ஆச்சார்யர்-ஒழுக்கத்துக்குரியவர்; குரு—பாபங்களை அழிப்பவர்; உபாத்யாயர்—அருகில் இருந்து ஞானத்தை அருள்பவர்; ஆசிரியர்—குற்றங்களை நீக்குபவர்.

இவ்வாறு ஆசிரியரைக் குறிக்க எழுந்த சொற்கள் அனைத்தும் அறி

யாமையை அகற்றுபவர் என்னும் பொருளை உணர்த்தல் காணலாம்.

எனவே, அஞ்ஞான இருளைத் தம் ஞானத்தால்-ஞான ஒளியால் போக்கு பவர் ஆச்சார்யரே என்பதை அறி கிறோம்.

அஞ்ஞான திமராந்தஸ்ய
ஞானஞ்சன ஸலாகயா
சக்ஷுர் உன்மீலிதம்யேன
தஸ்மை ஸ்ரீகுரவே நம:

என்னும் சுலோகமும் இப்பொரு ளையே உணர்த்தல் காண்க.

நமக்குத் தந்தையைச் சுட்டிக் காட்டுபவள் தாய். குருவைச் சுட்டிக் காட்டுபவர் தந்தை. தெய்வத்தைச் சுட்டிக் காட்டுபவர் குரு. எனவே, தெய்வத்தை நாம் அறிய வேண்டு மானால் குரு தேவை.

'மாதா பிதா குரு தெய்வம்'

என்று ஔவையார் வரிசைப்படுத்திக் கூறியுள்ள திறம் வியத்தற்குரியது.

பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரன் முதலான தெய்வங்களாகவும் உள்ள வர் குரு ஒருவரே!

குருர் பிரும்மா குருர்விஷ்ணு
குருர் தேவோ மஹேஸ்வர:
குருஸ் ஸாக்ஷாத் பரம்பிரும்மா
தஸ்மை ஸ்ரீ குரவே நம: ||

அனைத்துமாக உள்ளவர் ஆச்சார்யரே என்பதை உணர்த்தும் அழகிய தமிழ்ப் பாடல் இதோ!

தந்தைதாய் ஆவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பம்நமக் காவானும்— எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானும் அருட்
கோனாகு வானும் குரு.

மனிதனின் ஏற்றம் குருவையே சார்ந்துள்ளது என்பதை இதுகாறும் ஆய்ந்தவற்றால் அறிகிறோம். தனி மனிதனுக்கேயன்றிச் சமுதாயத்துக் கும் நல்வழி காட்டுபவர் குருவே! எனவேதான் பண்டைக்கால அர சாட்சியில் குருவுக்குச் சிறப்பான தோர் இடமிருந்திருக்கிறது. 'அரச குரு' என்னும் பதவிக்கு மன்னன் தலை வணங்கி வந்ததை வரலாறு எடுத்துக் காட்டுகிறது.

திருமாலின் அவதாரமான இராம பிரான் தன் குலகுருவான வசிட்ட ரையும், கண்ணபிரான் சாந்திபிநி முனிவரையும் வழிபட்டு வந்தார்கள் என்பது எதனைக் காட்டுகிறது? குரு மகிமையை யன்றோ?

குரு தரிசனம் கோடி புண்ணியம். குருவைத் தரிசிப்பதால் தேவர் மூவரை வழிபட்டதன் பயனை அடை யலாம். கங்கை காவிரியில் மூழ்கிய புண்ணியம் வந்து சேரும். தலங்கள் பலவற்றைத் தரிசித்ததன் பேறு கிடைக்கும். தான தர்மங்கள் செய்த தன் பயன் கிட்டும். ஏகாதசி விர தம், சோமவார விரதம் முதலான விரதங்களின் பலன் தானே வந்து சேரும். யாக பலன்கள் முதலான யோக பலன்கள் கிடைக்கும். கும் பாபிஷேகம், தேர்த்திருவிழா முத லானவற்றைக் கண்ட புண்ணியத் துக்கு நிகராகும். வினைகள் வெந் தொழியும். பாபங்கள் தானே அக லும்.

குரு தரிசனம் செய்ய இயலாதவர் என்ன செய்வது? குருவை மனத் தால் நினைக்கலாம். அவர் திரு நாமத்தை வாயால் உச்சரிக்கலாம். இவ்வாறு செய்வதால் சர்வமங்கள மும் உண்டாகும். எடுத்த காரியம் யாவிலும் வெற்றியே கிடைக்கும்.

குரு நிந்தனை கொடியது. தெய்வ நிந்தனையைக் குரு போக்கி விடு வார். ஆனால் குரு நிந்தனையைத் தெய்வமும் போக்க முடியாது. எனவே ஒரு வகையில் தெய்வத் தைக் காட்டிலும் குருவே உயர்ந்த வராகிறார். குருவுக்கு நிகர் குருவே!

ஆச்சார்யரை மதிக்கத் தெரியாத எந்த நாடும் அமைதியை பெறமுடி யாது. ஆச்சார்யரை மதிக்காத யாரும் அந்தமில் இன்பத்தை அடைய முடியாது.

குருவின் மகிமையே மகிமை! குரு வைத் தரிசித்து, குருவின் வழிநின்று குருவின் ஆசி பெற்று உலகம் நலம் பல பெறுவதாக! குருவருள் குவலய மெல்லாம் தழைப்பதாக! வாழ்க வையகம்!

வளர்க குருவருள்!

*

---

(18-ம் பக்கத் தொடர்ச்சி)

வைசம்பாயனர் காட்டியுள்ள ரிஷிகளைக் கூட்டி பாரதத்தை உப தேசித்து வந்தார். இப்படி நாடு பூராவும் பரவி தலைமுறை தலைமுறை யாக வந்து உலகப்பிரசித்திபெற்றது. பாரதக் கதை மிகவும் பெரியது. அதனால் உபமானங்களுக்கு "பாரதக் கதை போல்" என்று பழமொழி வழங்கி வருகிறது.

உலகத்திற்கு வேதங்களையும் அனேக ஞான நூல்களையும் சாஸ் திரங்களையும் பொக்கிஷமாக அளித்த வியாஸரின் பெருமை சொல்லுக்கு அடங்காது. யுக காலமாய் புகழ் பெற்ற இவர் இன்றும் பத்ரியில் வசிப்பதாகக் கூறப்படுகிறது.

ஆதி சங்கரர் பீடத்தில் அமர்ந்து வரும் சங்கராச்சாரியார்கள் அனை வரும் ஒவ்வொரு வருஷமும் வியாஸ பௌர்ணமி அன்று வியாஸ பூஜை ஆரம்பித்து ஒரே ஸ்தலத்தில் தங்கி சாதுர்மாஸ்யம் அனுஷ்டித்து வரு கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. பூஜை காலம் முடிந்த பிறகுதான் சஞ்சாரத்திற்கு வேறு ஸ்தலத்திற்கு செல்வார்கள்.

இப்படி பெருமையும் புகழும் பெற்ற வியாஸ பகவானுக்கு நாம் என்றும் கடமைப்பட்டிருக் கிறோம். பண்டைக் காலத்து ரிஷி களில் முக்கியமான இம்மஹானை நாமும் நமஸ்கரிப்போமாக! நமது ஆழ்ந்த நன்றியும் அவருக்கு உரித் தாகுக!

●

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY H. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

